ஆசிரியர்
நா. கிருஷ்ணமூர்த்தி

# கசடதபற

(ஒரு வல்லின மாத்ஏடு)



## மஹ்ஹான்
## காந்தீ மஹ்ஹான்

எழுந்ததும் கனைத்தார்; மெல்ல
சொற்பொழிவாற்றலானார்;

வழுக்கையைச் சொறிந்தவாறு
'வாழ்கநீ எம்மான்' என்றார்;

மேசையின் விரிப்பைச் சுண்டி
'வையத்து நாட்டில்' என்றார்;
வேட்டியை இறுக்கிக் கொண்டு
'விடுதலை தவறி' என்றார்;

பெண்களை நோட்டம் விட்டு
'பாழ்பட்டு நின்ற' என்றார்;

புறப்பட்டு நான் போகச்சே
'பாரத தேசம்' என்றார்;

'வாழ்விக்க வந்த' என்னும்
எஞ்சிய பாட்டை தூக்கி
ஜன்னலின் வழியாய்ப் போட்டார்
தெருவிலே பொறுக்கிக் கொள்ள.

— ஞானக்கூத்தன்

டிசம்பர் 1970
30 காசு

1 தேவடி தெரு
சென்னை 4

3



எங்களுக்கு வரும் கடிதங்களில் சிலர் 'கதை கவிதைகள் அனுப்பினால் பிரசுரிப்பீர்களா?' என்று கேட்கிறார்கள். மிகச்சுலபமாக 'ஆமாம், பிரசுரிப்போம்' என்று பதில் சொல்லி விடலாம். என்றாலும், இக் கேள்வியையும் பதிலையும் சற்று யோசித்துப் பார்க்கலாம்.

இக் கேள்வியை ஏன் கேட்கத் தோன்றியது? தங்கள் மேல் நம்பிக்கை இன்மையால் கேட்கிறார்களா? ஆரம்ப நிலையில், தங்கள் படைப்பின் தரத்தை தாங்களே நிர்ணயிக்க முடிவதில்லை யாதலால் மனம் பல விளைவுகளுக்கு உள்ளாகிறது, எதிராளியைக் கொம்பன் என்று நினைக்கிறார்கள். அபத்தமாக இப்படி ஒரு கேள்வி வருகிறது.

அல்லது எங்கள் மேல் நம்பிக்கை இன்மையால் சந்தேகத்தோடு இப்படிக் கேட்கிறார்களா? இன்றைய பத்திரிகைச் சூழ்நிலையான நல்லதை ஏற்காதது போலவே கசடதபற சூழலும் இருக்குமோ என்ற சந்தேகமா? சந்தேகம் என்றால் கேள்வி தேவையில்லை. அப்பத்திரிகைப் பழக்கம்போல் கேள்விபோடாத போதும் போட்ட பிறகும் உள்ள நிலை ஒன்றேதான். அமைதி, அமைதி, பேரமைதி. எனவே, கேள்வி அபத்தமாகிவிட்டது.

சில கேள்விகளுக்கு, 'ஆம், இல்லை' என்ற இரண்டு பதில்கள் உண்டு. ஆனால், இக் கேள்விக்கு, தோன்றிய மனதைக் கொண்டு 'ஆம்' என்ற ஒரே பதில்தான் இருக்கிறது. கேளவி அதைத்தான் எதிர்பார்க்கிறது. எனவே, இக்கேள்வி தேவையில்லாததாகிறது அதனால் அபத்தமாகிறது.

'நியாயமான கேள்வி; இதற்குப் பதில் வரும்' என எதிர்பார்க்கிறார்கள் என்றால் எங்கள் மேல் நம்பிக்கை இருக்கிறது என்றாகிறது. எனவே கேள்வி இல்லாமல்விஷயத்தை அனுப்பி வைத்திருக்கவேண்டும் ஆனால் கேட்கிறார்கள். ஆகையால் அபத்தம்.

இக் கேள்விக்குச் சொல்லும் பதிலும் அபத்தமாகிறது. பிரசுரிப்போம் என எப்படி முன் கூட்டியே விஷயத்தைப் படிக்காமல் சொல்வது? சொல்லி, விஷயம் வந்து படித்து நிராகரிக்கப்பட்டால் பதில் அபத்தம். பிரசுரிக்க மாட்டோம் என்று சொல்ல முடியாது. இப்படி சொல்லவே முடியாது. வருவதை வரவேற்று பிரசுரிக்கவே பத்திரிகை இருக்கிறது. எனவே எதிர்மறையில் பதில் சொல்ல முடியாத அபத்த நிலை வந்து விடுகிறது.

ஒரு ஜனரஞ்சகப் பத்திரிகை போலவே கசடதபற பதில் சொல்லாமலிருத்தல் இயலாததும் அபத்தமாகிறது. பதிலில் ஆதரவுக்கு ஆள் தேடி ஓடுகிற அபத்த அர்த்தம் தொனிக்கிறது.

எனவே, இதுபோன்ற கேள்விகளை எல்லாம் தூக்கி மூலையில் கிடாசி விட்டு, உங்கள் விஷயத்தை அனுப்புங்கள். திருப்பி அனுப்பப் பட்டாலும் புதியவைகளை அனுப்பிக்கொண்டிருங்கள். திரும்பத்திரும்ப அனுப்புங்கள். எல்லாவற்றையும் படித்துப் பார்த்தே நாங்கள் போடுவதையும் நிராகரிப்பதையும் செய்கிறோம். இன்று வெளிப்படாத ஒருவரின் திறமை நாளைக்கு வெளிப்படலாம். அன்று, அந்தத் திறமையை நாங்கள் கண்டு கொள்வதற்கு நீங்கள் உதவிக் கொண்டிருக்கவேண்டும். புதிய திறமையைக் கண்டு பிடிக்கக் கசடதபற காத்துக் கொண்டிருக்கிறது.

இப்படியெல்லாம் இந்தப் பேர்வழிகள் பிரசாரத்திற்காக எழுதுகிறார்கள் என்றுமட்டும் நினைத்து விட வேண்டாம். எங்களால், மேய்ப்பனைப்போல் மனிதனை மனோதைத்துவத் தும்பு போட்டுக் கவணையில் கட்டி வைக்கோல் உதறி வைத்துவிட முடியும். பிறகு அசை போட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதான். இந்த முனைப்போடுதான் நாங்கள் அடக்கத்துடன் இருக்கிறோம் என்பதைச் சில மூன்றாம் பேர்வழிகளுக்காக இங்கு உங்கள் முன்சொல்லவேண்டியிருக்கிறது.

ஒன்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறோம். புதியவர்களுக்கு ஆரம்பத்தில் சற்றுச் சலுகை காட்டப்படும். போகப் போக அந்தச் சலுகைகள் மறுக்கப்படும். பிறகு, சலுகை இல்லாமல இடம் பிடித்துக் கொள்கிற தரத்திற்குப் படைப்புகள் இருக்க வேண்டியிருக்கும். ஆனால், புதியவருக்கு ஆரம்பத்தில் சலுகை என்பது நிரந்தரமான அளவு கோல். கசடதபற வெறும் பத்திரிகையில்லை. மிகத் தரமானவற்றை மட்டும் வெளியிட்டுக் கொண்டிருக்கும் பத்திரிகையில்லை இது. வெளிவந்திருப்பவற்றை வாசகர்தான் விமர்சனப் படுத்திப்புரிந்து கொள்ள வேண்டும். ஒரு பயிற்சியாகவும் கொள்ள வேண்டும். எனவே கசடதபற ஒரு இயக்கம். ஆகையால், தென்படுகிற திறமைகளை எங்கள் பக்கம் இழுக்கவே பார்த்துக் கொண்டிருப்போம்.

# கத்திரி

"நகுலன்"

பகல் 12 மணி இருக்கும். முதலாளி வெளியே போயிருந்தார். கூட வேலை செய்து கொண்டிருந்த இரண்டு பையன்களும் அன்று சேர்ந்தாற்போல் வரவில்லை. நல்ல வெயில். தெருவிலே ஈ காக்காய் இல்லை. அப்பொழுதுதான் சிவராமன் கடைக்குள் ஏறிவந்தான். நாங்கள் இருவரும் ஒரே தெருவில்—அக்கிரகாரத்தைத் தாண்டி ஏழைப் பார்ப்பனர்கள் வசிக்கும் பள்ளத்தெருவில் பக்கத்து வீட்டுப் புழுக்களாக இருந்தோம். பிறகு அவன் பிரிந்துபோய் ஒரு நாலு வருஷம் ஆகியிருக்கும். இப்பொழுது அவன் இங்கேயா வந்து சேரவேண்டும்? கையில் பசை இருந்ததுபோல் தோன்றினது. என்னைப் பார்த்ததும் அடையாளம் கண்டு கொண்டுவிட்டான்.

"என்னடா, பழி, இப்படிக் கிருதாவும் மீசையுமா அசல் கேடி மாதிரி?"

"அது சரிதான்ம்பா. இந்தத் தொழில்லெயும் என் பிராம்மணுத்துவம் என்னை விடவில்லையா? சரி, வேணுமா?" என்று நான் பீடி பற்றவைக்கும் தயாரிப்பில் அவனுக்கும் ஒன்று நீட்டினேன்.

அவன் வேண்டாம் என்று ஒரு சிகரெட்டைப் பையிலிருந்து எடுத்தான்.

"நீ என்னடா பண்றே?"

"நீ தலை வெட்டினு, நான் கார் ஓட்றேன்" என்றுன்.

பிறகு நான் தொழிலை ஆரம்பித்தேன். அவன் தலையைக் கலைத்துவிட்டு "என்னடா ஒரே நரையா இருக்கே" என்றேன்.

"பார்வி, அஞ்சு குழந்தைடா. அதுவும் அடுத்து அடுத்து."

"என்னடா அஞ்சா?"

"போடா என் ஆத்திரத்தைக் கிளப்பாதே. அது சரி உன் விஷயம் என்னடா?"

"நான் அந்த வியாபாரமே வேண்டாம்னு வைச்சுட்டேண்டா" என்று சொல்லிவிட்டுப் ஃபானைத் திருகச் சென்றேன். திருகிவிட்டு அவனிடம் "என்னடா வெறும் கத்திரியா எலெக்ட்ரிக் கிளிப்பராடா?" என்றேன்.

"நமக்கெல்லாம் கத்திரி போறுண்டா. அது சரி தாண்டா. நீ எப்படா இங்கு வந்து சேர்ந்தே? அந்த ஸ்ரீமகள் இண்டஸ்டீரீஸ் டைரக்டர் வீட்டிலெ ஒரு நாள் நீ இல்லேன்னு, அந்த அம்மா அப்படித் தவிப்பாங்களேடா." "சும்மாச் சொல்லுடா."

"உனக்குத்தான் தெரியுமேடா. நான் பிறந்ததும் அப்பா போய்ட்டார். எனக்குப் படிப்பு மண்டேலே ஏருதுன்னு தெரிந்ததும் அம்மா எனக்குச் சமைக்கச் சொல்லிக் கொடுத்தா. அம்மாவை நினைச்சா இப்பவும் அழுகை வறதுடா. அந்த இடத்திலெ என்னை அமத்திவிட்டு நாலாநாள் அவ போய்ட்டா."

நான் நிறுத்திவிட்டு, கத்திரிப்பதை நிறுத்திவிட்டு அவனிடம் "ஏண்டா உனக்கு நீளமா வெட்ணமா, இல்லை க்ளோஸா அடிக்கணமா" என்றேன்.

"அட அதெல்லாம் வேண்டாம்டா சாதாரணமா வெட்டு. க்ஷவரம் மாத்திரம் ஜாக்கிரதை. என் முகத்திலெ கத்தியை ஒரு தடவை கொஞ்சம் அஜாக்கிர்தையா இழுத்தையானு ஒரே இரத்த விளாறுதான்."

"சரி உன் கதையைச் சொல்லுடா. இந்தத் தொழில்லெ எப்பவந்தே?"

"ஏண்டா பயப்படறயா?"

"நமக்கு எதுக்குடா பெரிய இடத்துப் பொல்லாப்பு."

"அது சரிடா. எங்க வீட்டு அம்மாவைப் பத்தி ஏதாவது தெரிஞ்சா நீ இப்படிப் பேசமாட்டெ. சொல்லுடா."

"சரிதாண்டா. இந்தத் தலை வெட்ற காரியம் ரொம்ப நல்லதுடா. எனக்கு ஒரு மகன் இருந்தா அவனை நான் படிக்க வைக்கமாட்டேண்டா. போறவன் வறவன் தலையை வெட்டுடா வெட்டு, அதுதாண்டா நல்லது என்பேன்."

"அட பாவி, கதையைச் சொல்லுடான்னு."

அவன் எனக்கு ஒரு சிகரெட்டை நீட்டினுன். நான் வேண்டாம் என்று இன்னொரு பீடியைப்பற்ற வைத்தேன்.

"அந்தப் பெண்ணைத் தெரியும் இல்லையா?"

"தெரியாம என்ன? அசல் மலையாளத்து அச்சிக்குட்டி மாதிரி இருக்குமே. ஒரே பெண்தான் இல்லையா?"

"ஆமாண்டா அந்தப் பெண்தான் காரணம்?"

"அடப்பாவி அவ்வளவு தூரம் போய்ட்டயா?

"நான் ஏண்டா அந்த வம்புக்கெல்லாம்போறேன். அம்மாவும் நானும் எத்தனை நாள் பட்டினி தெரியுமாடா? இப்பக் கூட அம்மாவைப்பத்தி நினைச்சா அழுகை வருதடா."

நான் ஃபானை நிறுத்தினேன். வாசனைத் தைலத்தை அவன் தலையில் தேய்த்துக் கலைத்தேன். அவன் "நீ அசல் ஏ ஒன் பார்பர்டா. இதெல்லாம் எங்கேருந்து கத்துண்டே?" நான் அவனிடம் ஒன்றும் சொல்லாமல் ப்ளாஸ்டிக் சீப்பால் அவனுக்கு வகிடு எடுத்து, நன்ருக வாரிவிட்டு ஒரு முறை ப்ரஷ்ஷால் அழுத்திவிட்டு "கண்ணுடிலெ பாருடா" என்றேன். அவனுக்கு ஒரே மகிழ்ச்சி.

"ஷேவ்?"

"பின்னெ இல்லாமெ"

கல்லில் ரேஸரைத் தீட்டிக் கொண்டே சொன்னேன் "ஒன்றுமில்லை. அந்தப் பையன் அடிக்கடி அங்கே வருவான். பாத்தா நம்ப சாரதி மாதிரி இருப்பான் - மூக்கும் முழியுமா. அசல் மன்மதன்தான். என்னவோ தூர உறவு என்று கூடக் கேள்வி. அன்னிக்கும் அவன் வந்திருந்தான். அவா—அப்பனும் அம்மாவும் - என்னிடம் வந்து "டேய், எங்கேயும் போயிடாதே. இவளுக்கு நாளைக்குக் கவர்ன்மென்ட் பரீக்ஷை கல்யாணத்துக்கு மதுரைக்குப் போகாம இருக்க முடியாது. இவ தங்கை கல்யாணம். எனக்கும் அங்கே ஒரு பார்ட்டியிடமிருந்து பணம் வர இருக்கு" என்று சொல்லிவிட்டுப் போக ஆரம்பித்தவரை நிற்கச் சொல்லிவிட்டு அந்த அம்மா என்னிடம் தனியாகச் சமையல் அறையில் வந்து "டேய், வனஜாவை உன் பொறுப்பிலே விட்டுட்டுப் போறேன்." என்ருள். அந்தப் பையன் போய்ட்டான். வனஜாவும் அவர்களுடன் ஸ்டேஷனுக்குப் போய் விட்டு வந்தாள். இந்த வீட்லெ ட்ரைவர் கிடையாது."

"தெரியுண்டா. அப்பத்தாண்டா நானும் ஸிக்ஸ்திலெ மூணுவது தடைவயாக பல்டி அடிச்சது"

"வனஜா காரில் திரும்பி வந்ததும் அந்தப் பையனும் கூட இருந்தான். நான் வனஜாவிடம அவள் அம்மா சொன்னதைச் சொன்னேன். அவள் என்னைத் திட்டினுள்.

அந்தப் பையன் சாப்பிட்டுவிட்டுத் திரும்பிப்போய் விட்டான். ஒரு வாரம் கழித்து அந்த அம்மாள் என்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டாள். எனக்கு ஒரு இடத்திலும் வேலை கிடைக்கவில்லை. அப்பொழுது நான் இந்தக் கடையில் ஏறி கைநீட்டிப் பிச்சை கேட்டேன். நீ என் முதலாளியைப் பார்த்தது கிடையாது. யார் யாரையெல்லாமோ, பெரிய எழுத்தாளன், பெரிய பத்திரிகை ஆசிரியர் என்று சொல்கிறார்கள். எல்லாரும் சுயநல வாதிகள், விளம்பர விச்வாசிகள். அவர்என்னிடம் பார்ப்பாரப்பையா, தலைவெட்றயா?'' என்றார்.

நான் அவர் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தேன். என் அம்மாவுடைய அவதாரம் தான் அவர் என்று எனக்குத் தோன்றியது. அவர் துடித்து விட்டார். ''என்ன தம்பி இது. இதெல்லாம் கூடாது தம்பி. ஒத்தரும் ஒத்தர் கால்லெயும் விழக் கூடாது தம்பி. நாம்பள்ளாம் மனுஷா, தம்பி'' என்றார். அவர் ஒரு மகான். ஐந்து நிமிஷத்தில் வந்து விடுவார்'' என்றேன்.

''இல்லை நான் போகிறேன். ஆமாம், என்ன ரொம்பப் புகழ்த்தறயே''

''ஆமாம் எங்க முதலாளிகிட்டெ நான் கதையைச் சொன்னதும் அவர் என்ன சொன்னார் தெரியுமா? ''தம்பி, அவங்கெல்லாம் அப்படித்தான். எங்க ஆத்தா அடிக்கடி சொல்லும். இந்தப் பணக்காரப் பெம்புள்ளங்களெல்லாம் அப்படித்தான் அதுவும் இப்படிப் பணமே கதிங்கறெ பெம்பளைங்ககிட்ட இருந்து நீ வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? ஆனா, ஒன்னு சொல்றேன் தம்பி! மேலே இருந்து ஒத்தன் இதெல்லாம் பார்த்துக்கிட்டுத்தான் இருக்கான். சிவராமா, அவர் உண்மையா ஒரு பெரிய மனிதர்.''

அவன் போய்விட்டான். களைந்த மயிர்த் தொகுதியை விளக்குமாற்றினால் கூட்டி ஒரு மூலையில் ஒதுக்கினேன். ஐயா சொன்னது எனக்கு ஞாபகம் வந்தது. பணக்காரர்களின் நாடியைப் பரீக்ஷை பார்க்க அவன் இருக்கான்.

அப்பொழுதுதான் அங்கு வந்த அவர் ''என்ன தம்பி, பலமான யோசனை?'' என்றார்.

''ஒன்றுமில்லை ஐயா'' என்றேன்.

எனக்கு அவள் நினைவைக் கத்திரித்து எறிவது அவ்வளவு கஷ்டமாகப் படவில்லை!

வெறும் பணக்காரி.

எங்கள் ஐயாவைப் போலவா?

---

## முத்தச் செய்திகள்

—வே. மாலி

கென்னடி விமான நிலையம்
இன்னுமோர் சிறப்பு பெற்றது;
மூன்றழ கியபெண் களுக்கு
நன்றிசொல் லவேண்டும், மாலி.

பெற்றோர் வரும்வரைக் காத்து
நிற்கும் பொழுதை இலவசத்
தோற்றம் தருவதில் போக்கச்
சற்றும் சகியா அழகியர்

வெற்றிகொ டுக்கும்
அற்புத மான
விற்பனைத் திட்டம்
கற்பனை செய்தார்.

தங்கள் விளம்பர மாக
இங்கே முத்தம் கிடைக்கும்
ஒன்றின் விலை ஒரு டாலர்
என்னும் செய்திப் பலகை

காட்டி யவுடன், டாலரை
நீட்டி யபடி, நாக்கைத்
தீட்டி யபடி, ஆண்கள்
கூட்டம் வளைத்துக் கொண்டது.

ஐந்து மணித்து ளிகளில்
நான்கு டாலர் திரட்டி
நின்ற நேரம்; விரைந்து
வந்த அதிகா ரிகள்தலை

யிட்டுத் தடைவி தித்து
விட்டுத் திரும்பிச் சென்றார்
என்கி றதொரு செய்தி
என்றான் பெரிய சாமி.

மற்றொ ருமுத்தச் செய்தி,
தர்ம நிதிகு விப்ப
தற்கா கஒரு மெத்த
உற்சா கமான போட்டி.

நின்ற நிலையில்
ஒன்றி யஇதழ்
ஒன்றி யபடி
என்ப துவிதி.

பத்தொன் பதாண்களும் பெண்களும்
முத்தத் தொடங்கினர், யாவரும்
முத்தத் தொடங்கிய கொஞ்ச நே
ரத்தில் சலித்தனர். ஆனால்

ஜென்னியும் டேவிடும் தொண்ணூற்
றைந்தும ணித்துளி நாற்பத்
தைந்துவி நாடிகள் முத்தி
வென்றனர், எப்படி என்றேன்.

உல்விச் போட்டி தானே?
நல்ல போட்டி, புதிய
கல்விச் சூழலுக் கேற்ற
நல்ல போட்டி என்றான்.

நல்ல வேளை, இந்த மாதிரி
வல்லு நர்கள் அந்த நேரம்
ஒன்று சேர வில்லை; கைக்கு
நான்கு டாலர் வந்த தென்றேன்.

நல்ல வேளை, இதைவிட
நல்ல போட்டி இருக்கிற
தல்ல வா, அதை வைக்கா
மல்விட் டார்களே என்றான்.

---

பார்க்க: தினமணி
20-2-70 முத்த வியாபாரம் (நியூயார்க்)
4-3-70 முத்தப் போட்டி (லண்டனில் உல்விச் பாலிடெக்னிக்)

# சாம்பமூர்த்தி ராயரும் சந்திரசேகரனும்

ஆர். சுவாமிநாதன்

இலக்கிய விமர்சனத்துறையில் இரு வேறு இலக்கிய ஆசிரியர்களை ஒப்பிட்டு ஆராய்வது ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு விஷயம். பாரதி—ஷெல்லி, கம்பன்—மில்டன், டால்ஸ்டாய் — தாஸ்தாவிஸ்கி, டிக்கன்ஸ்—காஃப்கா என்று இப்படிப்பட்ட ஆராய்ச்சி நூல்கள் பல வெளி வந்துள்ளன.

நானே, இருவேறு இலக்கிய ஆசிரியர்களின் இரண்டு சிறுகதைகளை—அதிலும் குறிப்பாக அவற்றின் முக்கிய கதாபாத்திரங்களை—க.நா.சு.வின் சாம்பமூர்த்தி, அழகிரிசாமியின் சந்திரசேகரன்—ஒப்பிடலாம் என்றிருக்கிறேன்.

க.நா. சுப்ரமண்யத்தின் 'தெய்வஜனனம்' என்கிற கதைத் தொகுப்பில் 'சாம்பமூர்த்தி' என்ற கதை. கு. அழகிரிசாமியின் 'வரப்பிரசாதம்' என்கிற சிறு கதைத் தொகுப்பில் 'ஒருமாதலீவ்' என்கிற சிறுகதை.

சாம்பமூர்த்திராயரும், சந்திரசேகரனும் இலக்கிய சரித்திரத்தில் கிட்டத்தட்ட இருபத்தைந்து வருட இடைவெளி விட்டு தோன்றியவர்கள். 'தெய்வ ஜனனம்' ஆயிரத்துத்தொள்ளாயிரத்து நாற்பதுக்கள் ஆரம்ப காலத்தில் வந்திருக்கிறது; (புத்தகத்தில் வருடம் குறிப்பிடவில்லை) 'வரப்பிரசாதம்' 1966-ல் வந்திருக்கிறது.

சாம்பமூர்த்தி ராயர் ஆஸ்திக்காரர். நான்கு வீடுகளும் ஐந்தாறு வேலி நிலமும், ரொக்கமாக கையில் நிறையப் பணமுமாக வாழ்க்கையைத் தொடங்கியவர். ஆளும் அழகர். அவருடைய பெண்டாட்டி அவரை விடச் சிறந்தவள். விருந்து, தான தருமங்கள் என்று விமரிசையாகவே குடும்ப வாழ்க்கை நடக்கிறது. அவருடைய மனைவி ஒரு வருஷம் நோய்ப் படுக்கையிலே கிடந்துவிட்டு செத்துப்போகிருள். ராயருக்கு வாழ்க்கையிலே ஒரு கசப்பு தட்டுகிறது. ஆறு மாதங்கள் தஞ்சாவூரிலிருந்து குடிக்கிருர்; தாசிகளோடு பழகுகிருர்.

"ஆனல் இதிலே அவர் மனது செல்லவில்லை. இந்த அசட்டுக் காரியங்கள் அவர் உள்ளத்தையும், பரிசுத்தமான ஆத்மாவையும் எவ்விதத்திலும் தொடவில்லை." கிராமத்திற்குத் திரும்பி உலக விவகாரங்களில் பட்டும் படாமலும் இருக்கத் துவங்குகிருர். தெய்வ வழிபாட்டில் ஈடுபடுகிருர். பட்டினியும், பூஜையுமாக நாட்கள் செல்கின்றன.

அவர் ஆஸ்திகள் கரைகின்றன. "தானதர்மங்கள், மனைவிக்கு வைத்தியம், அப்புறம் குடி, கூத்தி இத்யாதிகள் இப்படியாக முக்கால் வாசிக்குமேல் மறைந்துவிட்டது." பணம் தேவையானபோது கொஞ்சம் கொஞ்சமாக ராயர் வீடுகளையும் நிலத்தையும் விற்றுத் தீர்த்துவிட்டார்.

தாடியை வளர்த்துக்கொண்டு, அவர் வீடு வாசல், நிலம், தோப்பு எல்லாவற்றையும்விற்றுவிட்டு ஆற்றங்கரை ஓரமாக இருந்த தோப்பில் சவுக்கண்டி போட்டுக் கொண்டு இரண்டு மூன்று வருஷங்கள் வசித்தார். தாமே ஒருவேளை பொங்கித் தின்பார்; ஒவ்வொருநாள் அதுகூடக் கிடையாது, முழுப் பட்டினியே கிடந்து விடுவார்.

"அவருடைய தெளிந்த சிந்தனைகளும், எளிமையான வாழ்க்கையும், மேலான லட்சியங்களும், எல்லாத் துன்பங்களையும் ஓட்டும் தெய்வ பக்தியும் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. உலகத்துப் பசி தாகங்களை எல்லாம் மீறிய லட்சிய புருஷராக அவர் எனக்குக் காட்சி அளித்தார்." கடைசியில் அவர் இடுப்பில் கட்டியிருந்த வேட்டியுடன் பண்டரிநாதனை தரிசிக்கக் கிளம்பிவிட்டார். பண்டரீபுரம் போய்ச் சேர்ந்து நாற்பது நாளைக்குள் அவர் இறந்துவிட்டார்.

இது சிறு கதையல்ல என்று புது இலக்கண வாதிகள் முறையிடக்கூடும். ஒரு தனி மனிதனின் பூரா வாழ்வையும் சித்தரிக்கிற இதை வெறுமே கதை (tale) என்று குறிப்பிடுவதே பொருந்தும்.

பூராக் கதையையும் சொல்லி முடித்த ஆசிரியர் கடைசியில் இரண்டு வரிகளைச் சேர்க்கிருர். "அவருடைய வாழ்க்கையின் அர்த்தத்தைப் பற்றி நான் சிந்தித்துப் பார்க்கிறேன்."

சாம்பமூர்த்தி ராயரின் வாழ்க்கை அர்த்தம் உள்ளதுதான். அதில் நமக்கு சந்தேகம் கிடையாது. ஆனல் அதை ஆசிரியர் இவ்வளவு நேரிடையாகச் சொல்லும்போது தேவையற்ற ஒரு த்வனி (moral tone) கதைக்கு கிட்டிவிடுகிறது. இதுவும் நவீன சிறு கதையோடு பொருந்தாத ஆனல் கதை (tale)யோடு முற்றிலும் பொருந்தக்கூடிய ஒரு அம்சம்.

கு. அழகிரிசாமியின் 'ஒருமாத லீவ்' நவீன சிறு கதையின் எல்லா அம்சங்களும் பொருந்தியது.

சந்திரசேகரன் ஆபீசில் எல்லாரும் எடுக்கிருர்களே என்று தானும் ஒரு மாத லீவ் எடுக்கிருர். முதல் பத்து நாட்களுக்கெல்லாம் மாதச் சம்பளத்தைக் கரைத்து விடுகிருர். கடன்காரர்கள் நெருக்குகிருர்கள். பெண்டாட்டி, பிள்ளைகளும் தொல்லை கொடுக்கிருர்கள். மீதி லீவை ரத்து செய்துவிட்டு ஆபீசுக்குப் போனல் தேவலை என்ருகி விடுகிறது. ஆபீஸ் போவதற்காக பஸ் ஸ்டாண்டு வந்தவர் அங்கே போவதும் அவமானம் என்று நினைக்கிருர். வீட்டுக்கும் திரும்ப முடியாமல் ஆபீஸுக்கும் போக முடியாமல் கடற்கரையில் உட்கார்ந்து அழுகிருர்.

முற்போக்கு எழுத்தாளர் என அறியப்பட்ட அழகிரிசாமிதான் இந்தக் கதையை எழுதியிருக்கிருர். முற்போக்கை மீறிய மனித நேயம் இங்கு ஆத்ம விசாரமாக துலங்குகிறது.

கதையின் கடைசியில் வருகிற வரிகள்:

"சுற்றுமுற்றும் பார்க்க மேற்கொண்டு எதுவும் இல்லை. அதனல் புற உலகைப் பார்ப்பதை நிறுத்தித் தம்மைத்தாமே பார்க்கத் தொடங்கினர்."

தம்மைத்தாமே பார்க்கத் தொடங்கிய சந்திரசேகரனுக்கு தன் மீதே பரிதாபம்தான் ஏற்படுகிறது. "ஆபீசுக்கும் போக மனமில்லை; வீடு திரும்பவும் மனமில்லை. ஒரு குடும்பஸ்தனுக்கு இப்படி ஒரு நிலையா?" என்று தன்னைத் தானே நொந்து கொள்ளுகிருர். சந்திரசேகரன் மனம் குழம்பியிருக்கிற இந்த கட்டத்

தில் கதை முடிந்துவிடுகிறது. சில மணி நேரத்தில் அவர் மனக் குழப்பம் நீங்கி தெளிவு பெறலாம்; ஆபீசுக்கோ, வீட்டுக்கோ திடமாக நடையைக் கட்டலாம். அல்லது இரண்டையும் உதறிவிட்டு இமயமலையைப் பார்க்கவும் போகலாம். ஆனல் இந்த முடிவுகள் எதுவும் சூட்சுமமாகக்கூட அழகிரிசாமியால் சுட்டிக் காட்டப்படவில்லை.

சந்திர சேகரனின் மனக் குழப்பம்தான் கதையின் முடிவு.

சாம்பமூர்த்தி ராயர் செத்துப் போவதோடு அவர் கதை முடிகிறது. அவருடைய அனுபவங்கள் ஏதோ ஒருவிதமாக, மீறப்படமுடியாத சாவோடு முடிகின்றன. அந்த சாவும் நிம்மதியான சாவுதான். பண்டரீபுரத்தில் பண்டரிநாதனை பஜித்துக் கொண்டு உயிர் விடுகிருர்.

வாழ்நாள் பூராவையுமே ஆத்ம விசாரத்தில் கழித்து, ராயர் கடைசி நாட்களில் ஒருவிதமான தெளிவு பெறுகிருர்.

தனியாக இருக்கிறீர்களே, இரவில் உங்களுக்குப் பயமாக இருப்பதில்லையா?'' என்றேன் நான் ஒரு சமயம்.

''என்ன பயம்? தவிரவும் நான் எப்போதுமே இரவில் தனியாக இருப்பதில்லை. சில சமயம் வலை வீசி வௌவால் பிடிப்பவன் வந்து என்னுடன் இரவு முழுவதும் அளவளாவிக் கொண்டிருப்பான்.''

''யார் அது, வலை வீசி வௌவால் பிடிப்பவன்?''

''அவனு? அவனுக்கு இவ்வுலகில் எத்தனையோ பெயர்கள் உண்டு. சாத்தான் என்றும் கடவுள் என்றும் யமன் என்றும் பிசாசு என்றும் பலவிதமாக அவனைச் சொல்லுவார்கள், சில சமயம் அவன் ஸர்ப்ப ரூபமாக எனக்கருகே ஊர்ந்து செல்லுவான்'' என்ருர் சாம்பமூர்த்தி ராயர் புன்சிரிப்புடன்.

சாம்பமூர்த்தி ராயரின் தெளிவும், சந்திரசேகரனின் குழப்பமும் எப்படி ஏற்பட்டன? சாம்பமூர்த்தி ராயர் நில பிரபுத்துவ (landed gentry) வர்க்கத்தைச் சேர்ந்தவர். சந்திரசேகரன் நகரப்பாட்டாளி (urban proletariat) வர்க்கத்தைச் சேர்ந்தவர். சமூகவியல் பார்வையான இது ஓரளவு மேலோட்டமாகத்தான் (superficial level) பொருந்தும்.

ஒரு நிலப்பிரபுவின் தன்மையிலிருந்து மாறுபட்டு, சாம்பமூர்த்திராயர் மூங்கில் புதரில் முள் வெட்டவரும் குறவர்களுக்கு செருப்பு வாங்கித் தருகிருர். தான தருமங்கள், பூஜை புனஸ்காரங்கள் இவற்றைக் கூட வெறும் நிலப்பிரபுத்துவ சடங்குகளாக இல்லாமல் ஏதோ ஒரு ஆழ்ந்த அதிருப்தியைத் தணிக்கும்காரியங்களாகச் செய்கிருர். அவருடைய நிலையில் சமூக அந்தஸ்துக்கேற்ற காரியங்களாகசெய்யவேண்டியவைகளையும் அவர்சற்று எல்லை மீறியே செய்கிருர். இப்படி-இப்படி என்பதன்றி இன்னும் மேலே - இன்னும் மேலே என்றே அவர் காரியங்கள் நடக்கின்றன.

---

**உள்ளே**

மழைக்கு பயந்து

அறைக்குள் ஆட்டம் போட்டனத்

துவைத்த துணிகள்

—பாலகுமாரன்

---

பெண்டாட்டி செத்ததும் குடிப்பது, தாசி வீட்டுக்குப் போவது போன்ற விஷயங்களில் ஈடுபடுவது ஒரு கசப்பையும், அதிருப்தியையும்காட்டினலும் அவற்றை மீறி வந்துவிடுகிற மன வலிமை சாம்பமூர்த்திக்கு இருக்கிறது. அனுபவத்தின் வெவ்வேறு சாயல்களையும் தான் ஆட்கொள்ளும் விதமாகத்தான் அவர் செயலாற்றுகிருர். அவர் கையை மீறிப்போய் விடுகிற அனுபவம்—அவரை மூழ்கடித்து விடுகிற அனுபவம் எதுவுமே இல்லை என்றே நமக்குத் தோன்றுகிறது. ஒரு பூரணமான வாழ்க்கை வாழ்ந்துவிட்ட திருப்தியுடன் அவர் பண்டரீபுரத்திற்குப்போய் உயிர் விடுகிருர்.

''தானகப்பணம் சம்பாதிக்கவும், யாராவது சம்பாதித்துத் தந்திருப்பதை வைத்துக் கொள்ளவும் அறியாதவனுக்கு உலகம் வெகு சுலபமாகவே அசட்டுப் பட்டம் கட்டிவிடுகிறது. இப்படிப்பட்ட அசட்டுத் தனம் படைத்தவனை உலகம் வெறுக்கிறது. அந்த அசட்டுத்தனத்தை பாவமாகவும், ஒரு ரோகமாகவும்—மீளா நரகமாகவும், உலகம் மதிக்கிறது.'' என்கிற கதையின் ஆரம்பவரிகள் சாம்பமூர்த்தி ராயரை ஒரு அந்நியன் (outsider) ஆக நமக்கு அறிமுகப்படுத்துகின்றன.

சந்திரசேகரன் அழுத்தப்பட்ட உழைப்பு வர்க்கத்தைச் சேர்ந்தவர். ஒரு மாதலீவ் வாங்குவதற்காக அவர்படும் கஷ்டங்கள், சகித்துக் கொள்ளும் அவமானம், அவருடைய கவலை, ஆத்திரம், இளிச்ச வாய்த்தனம் எல்லாம் அவ்வளவாக சுய கௌரவமில்லாத ஒரு அரை மனிதனையே நமக்கு அறிமுகப்படுத்துகின்றன.

இந்த இடத்தில் சாம்பமூர்த்திராயர் கதையின் ஒரு பகுதியை நினைவுக்குக் கொணர்ந்தால் சந்திரசேகரனின் அற்பத்தனம் நமக்குப் புரியும்.

சாம்பமூர்த்திராயர் படித்து முடித்ததும் கொஞ்சகாலம் போலீஸ் இலாகாவில் உத்தியோகம் பார்க்கிருர். தினசரி பூஜை புனஸ்காரத்தையும், தர்மம், விருந்துபசாரணை முதலியவற்றையும் சரியாகச் செய்ய முடியவில்லையே என்று வேலையை விட்டுவிட்டு ஊருக்குத் திரும்பிவிட்டார்.

சாம்பமூர்த்திராயர் ராஜிநாமா கொடுத்தார் என்ருல் அவருக்கு வீடு, வாசல், நிலம், ரொக்கம் எல்லாம் இருந்தது. சந்திரசேகரன் என்ன செய்வார்? எங்கே போவார்? அவமானத்தைத் தாங்கிக்கொள்ள வேண்டியதுதான் என்று நீங்கள் இடை மறிக்கக் கூடும்.

இது ஓரளவுக்குத்தான் உண்மை. சாம்பமூர்த்தியின் வசதியும், சந்திரசேகரனின் வசதியின்மையும் அவர்கள் மனேபாவங்களை உருவாக்குவதில் ஓரளவு இடம் பெறுகின்றன என்ருலும் இதுவே முழு உண்மையாகாது. சாம்பமூர்த்தி அவ்வளவாக வசதி இல்லாமல் கழிக்கிற கடைசி நாட்களையும் அதே மன சுதந்திரத்துடனும், சந்தோஷமாகவும் கழிக்கிருர். கடைசி நாட்களில் சாம்பமூர்த்திக்கு குடும்ப தொந்திரவு இல்லை; சந்திரசேகரனுக்கோ மனைவியும், ஐந்து குழந்தைகளும் இருக்கிருர்கள் என்று நீங்கள் சொல்லக் கூடும்.

சாம்பமூர்த்தி பட்டணத்தில் வசதியாய் இருக்கிற பிள்ளையை லட்சியம் பண்ணுமலேதான் கடைசி நாட்களை கழிக்கிருர். இதற்கு அவர் தன்னுடைய துரதிருஷ்டத்தை காரணமாகச் சொன்ன போதிலும் அதையும்மீறி அவருடைய பற்றற்ற தன்மை நமக்குத் தெரிகிறது. பற்றுவதும், பற்ருமல் இருப்பதும் நம்மு

டைய மனசுக்கு அடங்கிய விஷயங்கள் என சாம்ப மூர்த்தி நிரூபிக்கிறார்.

சந்திரசேகரனை பந்தங்களில் மாட்டிக்கொண்டு விழிக்கிறார்; கிடந்து உழல்கிறார். இதையும் உணராமலே செய்கிறார் என்னும் போது அவர் மீது நமக்கு பரிதாபம் உண்டாகிறது; எரிச்சலும் ஏற்படுகிறது. கடைசியில்தான் ஓரளவு உணரத்துவங்குகிறார். அவர் மனம் குழம்புகிற அந்த நிலையில் ஒரு விழிப்புக்கான வாய்ப்பு இருக்கிறது. சந்திரசேகரன் ஒரு அந்நியராகக்கூடும். (potential outsider) அவர் அந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொள்வாரா அல்லது தவறவிட்டுவிடுவாரா என்று நம்மால் சொல்ல இயலவில்லை. ஆனால் இந்த அளவுக்கு அவர் வரமுடிந்ததே ஒரு வெற்றிதான்.

சந்திரசேகரனின் கஷ்டங்கள். அவர் வசதியின்மையால் ஏற்பட்டவை. அதை நிவர்த்திக்க வழிகள் ஆராய வேண்டும் என்று சொல்கிறவர்கள் இருக்கக்கூடும். ஒருமாத லீவ் எடுத்துவிட்டு கஷ்டப்படுகிற சந்திரசேகரன் நினைத்துக் கொள்கிறார் "எனக்கு எதற்கு லீவ்? குற்றாலம், கொடைக்கானல் என்று போகிறவனுக்கு லீவ் வேண்டும். கடன்காரர்களுக்குப் பதில் சொல்லவும், பெண்டாட்டியோடு சண்டை போடவும், பிள்ளைகளை அடித்து உதைக்கவுமா ஒருவன் லீவ் எடுக்க வேண்டும்?"

சந்திர சேகரனுக்கு பொருள் வசதியின்மை மட்டும் இல்லை; சில அடிப்படை மனித குணங்களும் இல்லாமலிருக்கின்றன; சுய கௌரவம், துணிச்சல் முதலியவை. இவை இல்லாமலிருப்பதே அவருடைய பொருளின்மைக்கும் காரணமாக இருக்கக்கூடும்என்று தோன்றுகிறது.

சாம்பமூர்த்தி ராயர் காலத்திலும் அழுத்தப்பட்ட உழைப்பாளி வர்க்கம் இருந்திருக்கிறது; அந்த வர்க்கத்தைச் சேர்ந்த பெரும்பான்மையினரை பிரதிபலிக்க க. நா. சு. தவறிவிட்டார் என்று சமூகவியல் விமர்சகர்கள் சொல்லக்கூடும். சாம்பமூர்த்தி ராயர் வசதி படைத்த நிலப்பிரபு என்பதற்காக க. நா. சு. அவரை கதாபாத்திரமாக எடுத்துக் கொண்டார் என்பது சாமர்த்தியமில்லாத (naive) விமர்சனம். சாம்பமூர்த்தியுடைய மனித குணாதிசயங்கள் (human qualities)—அவரை அந்நியர் (outsider) ஆக்கிக்காட்டுகிற குணாதிசயங்கள்—இவையே க. நா. சு. என்கிற இலக்கிய ஆசிரியரைக் கவர்ந்திருக்க வேண்டும்.

கு. அழகிரிசாமி சந்திரசேகரனை சித்தரிக்க எடுத்துக் கொண்டது எங்ஙனம்? அழுத்தப்பட்ட உழைப்பாளி வர்க்கப்பிரதிநிதி என்பதனால் என்று பதில் வருமேயானால் மீண்டும் சாமர்த்தியமற்ற விமர்சனம்.

உணர்ச்சிகளை மனசுக்குள் அடக்கிக் கொண்டு அரைமனிதனாக, சம்சார சாகரத்தில் மூழ்கிக் கிடக்கிற சந்திரசேகரன் கடைசியில் ஒரு சங்கடத்தில் (predicament) வைக்கப்படுகிறார். இந்த சங்கடம்தான் அழகிரிசாமி என்கிற இலக்கிய ஆசிரியரை கவர்ந்திருக்க வேண்டும். இதிலிருந்து மீட்சி அல்லது மறுபடியும் பொறியில் சிக்குதல் என்பது நியாயப்பிரச்னை. (moral problem) நவீன சிறுகதை எழுதுகிற அழகிரிசாமி நியாயத்தீர்ப்புதர முற்படவில்லை. அவருக்கு அது அவசியமாகப் படவில்லை.

சந்திரசேகரன் போன்று பெரும்பாலான மனிதர்கள் வாழ நேர்கிற நவீன சமுதாயத்தை அழகிரிசாமி குற்றம் சாட்டுகிறாரா? ஆம் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. 'எனக்கு எதற்கு லீவ்? குற்றாலம், கொடைக்கானல் என்று போகிறவனுக்கு லீவ் வேண்டும்.' என்கிற வரிகள் அதைத்தான் சொல்லுகின்றன. அதே நோத்தில் இப்படிப்பட்ட அமைப்பிலிருந்து விமோசனம் பொதுப்படையாக அவர் காட்டவில்லை. சந்திரசேகரனின் பிரச்னை அவர் மட்டில் தனிப்பட்ட தத்துவ (metaphysical) உருவம் கொள்கிறது.

சாம்பமூர்த்தி ராயர் போன்று சிலரேனும் வாழ நேர்ந்த பழைய நிலப்பிரபுத்துவ சமுதாய அமைப்பை க. நா. சு. ஏற்றுக் கொள்கிறாரா? ஆம் என்றுதான் தோன்றுகிறது. சாம்பமூர்த்திராயர் ஒவ்வொரு நிமிஷமும் அந்த சமுதாயத்திற்கு எதிராகவோ. அல்லது அந்த சமுதாயம் ஏற்றுக் கொண்ட காரியங்களையே எல்லைமீறி செய்வதன் மூலம் அந்நியன் (outsider) தோற்றம் கொண்டாலும் அந்த சமுதாயத்தோடுதான் அவர் பொருந்துவார் என்று நமக்குப்படுகிறது.

மீண்டும் மீண்டும் இந்தக் கதைகளை படிக்கிற போது சமுதாயப்பார்வை எல்லாம் மீறி நம் கண்ணுக்குப்படுவது ஒரே ஒரு விஷயம்தான்:

சாம்பமூர்த்தி, சந்திரசேகரன் என்ற இலக்கிய கதா பாத்திரங்கள். வாழ்க்கையில் அர்த்தம் காணத் துடிக்கிற தனிமனிதர்கள். ●

---

## வலை

ஓட்டில்,
ஒரு மாத ஒட்டடை,
அரசியல் வேடிக்கையாய்,
ஆயிரம் சிக்கல் இடைஇடையில்.
அதில்,
என்றோ, அரசமிடுக்குடன்
வலைகட்டி நடந்த சிலந்தி – பின்
பிணமாகத் தொங்கிய முடிவை
நான் பார்த்ததுண்டு,
இன்று,
"சிலந்திப் பிணமும்" மாறி
ஒட்டடையாய்,
சிறுபூச்சி வலைகளுக் கொரு
கைப்பிடிப்பாய்,
பிணசாட்சியாய் நிற்கிறது.
வலைபின்னும் வாழ்வு மட்டும்
நின்ற பாடில்லை.

—எஸ். வைதீஸ்வரன்

# ஜன்னல்

சுஜாதா

அவன் நுழைந்தபோது அந்த இடத்தில் ஐந்தாறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நடுவே ஒரு பழைய வீக்லி கந்தலாக இருந்தது. அலமாரிக்குள் நிறைய மருந்துகள் அடுக்கி இருந்தன. பாதி கண்ணாடியும் பாதி மரமுமாக இருந்த தடுப்பின் கண்ணாடிப் பகுதியில் கன்ஸல்டிங் நேரம் மாலை ஆறிலிருந்து எட்டரை வரை என்றது; தடுப்புக்கு அந்தப் பக்கம் டாக்டர் ''ஆ' சொல்லு'' என்று சொல்வது கேட்டது. ஒரு மின்விசிறி மிக மெதுவாகச் சுழன்றுகொண்டிருந்தது. அதன் நிழல் சுவற்றில், பெஞ்சின்மேல், அந்தப் பெண்ணின் மார்பின்மேல் புத்தகங்களின் மேல் என்று மடங்கியும் நிமிர்ந்தும் நெளிந்தும் சுழன்று கொண்டிருந்தது.

புதிதாக வந்தவன் பெஞ்சில் இருந்த வெற்றிடத்தை உடனே அடைந்து உட்கார்ந்தான். எதிரே இருப்பவரைப் பார்த்து புன்னகைத்தான். அவர் மஃப்ளரின் நிழலில் பதில் புன்னகை செய்யவில்லை. அவர் அருகில் இருந்த பெண் தன் புடவையை இன்னும் சரிசெய்து மறைத்துக்கொண்டு இன்னும் நெற்றியைச் சுருக்கிக் கொண்டாள்.

புதிதாக வந்து உட்கார்ந்தவனுக்கு நாற்பது வயதிருக்கலாம் அல்லது அது நிஜ நாற்பதாக இல்லாமல் முப்பது வயது முதிர்ந்த நாற்பதாக இருக்கலாம். அவன் சிரிக்க முயன்றதில் பொதுவாக ஒரு சினேகிதம் விரும்பும் தன்மை இருந்தது. பக்கத்தில் இருப்பவரிடம் கேட்டான்.

''ரொம்ப நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறீர்களோ?''

''ம்!'' என்றார் அவர்.

அவன் கேள்வியை மறுபடி கேட்க ''பதினைந்து நிமிஷம் என்றார்.''

அந்த அம்மாள் அவனைப் பார்த்த நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு ''குழந்தைக்கு மீஸில்ஸா?'' என்று கேட்டான்.

குறிப்பிட்ட குழந்தை ஜுர வேகத்தில் தூங்கிக் கொண்டிருக்க அதன் தாய் பதில் சொல்லவில்லை. அந்தப் பெண் இன்னும் அவனை வெறுத்தாள்.

அந்த அறைக் கதவு திறந்து உள்ளே 'ஆ' என்று சொல்லக் கேட்டதற்கு 'ஆ' என்று சொன்னவர், கையில் ஒரு புதிய, வெளுத்த காகிதத்துடன் வெளியே வந்தார். டாக்டர் தெரிந்தார். 'குட்ஈவினிங்' டாக்டர் என்றான்.

டாக்டர் ஈவினிங் என்று பதில் சொன்னார். அவனைப் பார்க்கவில்லை. 'நீங்க வாங்க அம்மா' என்றார். அந்தப் பெண் உள்ளே சென்றாள். உடனே எல்லோரும் மௌனமாக, சிரத்தையாக கண்ணாடிக்குப் பின் கேட்கப்போகும் வார்த்தைகளில் கவனமாக இருந்தார்கள்.

அவள் பேசுவது தெளிவாகக் கேட்கவில்லை. தாழ்வாக இருந்தது அவள்—டாக்டர் சம்பாஷணை.

புதிதாக வந்து உட்கார்ந்து சினேகிதம் தேடின ஆசாமி பக்கத்தில் இருப்பவரை ''உங்களுக்கு என்ன'' என்று கேட்டான். ''கையிலே கட்டி'' என்று கையைக் காட்டினார். ''பென்ஸிலின் நாலு இன்செக்ஷன் போட்டு நேற்றுதான் உடைஞ்சுது.'' ''அப்படியா'' சற்றுத் தாழ்ந்த குரலில் ''இவர் நல்ல டாக்டர் ஸார். கைகாரர் ஸார். நல்ல காசு'' என்றார் அவரும் தாழ்ந்த குரலில். ''நான் இவரிடம் இப்பொழுதுதான் முதல் தடவை வருகிறேன். இவரிடம் வந்ததே சரியாஎன்று எனக்குத்தெரியவில்லை. எனக்கு உடம்பு சரியா இல்லையா என்பது கூட எனக்குச் சொல்லமுடியாது. எனக்கு இவர் வைத்தியம் சொல்ல முடியுமா என்பதுகூட எனக்குச் சரியாச் சொல்ல முடியாது...''

உனக்கு என்ன என்று அவர் கேட்கவில்லையே என்று வருத்தப்பட்டான். 'அப்படியா' என்று மட்டும் சொல்லியிருந்தார்.

அடுத்த தடவை டாக்டர் கதவைத் திறந்தபோது அவன் 'டாக்டர் ஒரு நிமிஷம்' என்று சற்று உரக்கவே சொன்னான். எல்லோரும் அவனையே பார்த்தார்கள்.

''டாக்டர் எனக்குக் கொஞ்சம் அவசரம். என்னைக் கொஞ்சம் சீக்கிரம் அனுப்பிவிட முடியுமா?''

''என்ன உங்களுக்கு ஜுரமா?'' என்று கேட்டார் டாக்டர்.

''இல்லை''

''பின் என்ன?''

''உள்ளே வந்து சொல்கிறேனே'' என்று அசந்தர்ப்பமாகச் சிரித்தான்.

டாக்டர் ''சற்று இருங்கள். இந்த பேஷன்ட்டைப் பார்த்துவிட்டுக் கூப்பிடுகிறேன். ராமநாதன் வாங்க'' என்றார்.

ராமநாதன் (கையில் கட்டி) உள்ளே சென்றார்

மற்றவர்கள் அவனை, க்யூவை மீறப்போகும் அவனைப் புதிய வெறுப்புடன்பார்த்தார்கள். அவர்கள் மறுக்கமாட்டார்கள் எனத் தோன்றியது. டாக்டர் கோபக்காரராக இருக்கலாம். டாக்டர் பொதுவாகவே தீவிரமாக வரிசை முறையைப் பாதுகாத்தவராக இருக்கலாம். அவன் சினேகிதம் தேடும் முயற்சியை விட்டுவிட்டான். அந்த வீக்லியை அவன் எடுத்துப் பிரித்தான். அதை கவனமில்லாமல் திருப்பினான். மற்றொரு பெண் நுழைந்தாள். அவளுடன் ஒரு நான்கு வயதுப் பையன் வந்தான். வந்த உடன் உட்கார்ந்திருந்தவர்களை எல்லாம் பார்த்தான். வீக்லியைப் புரட்டிக் கொண்டிருந்தவன் சற்று ஒதுங்கி அவனுக்கு இடம் தர சின்னப் பையன் சுதந்திரமாக உட்கார்ந்து கொண்டு அதில் ஏரோப்ளேன் படம் இருக்கா என்று கேட்டான். அவன் வீக்லியைத் தீவிரமாக ஆராய்ந்து ஏரோப்ளேன் படம் தேடினான். பையன் பக்கங்கள் புரட்டப்பட அது என்ன இது என்ன என்று கேட்டான்.

''நீங்க வாங்க ஸார்'' என்று கதவு திறந்ததும் டாக்டர் கூப்பிட்டார். உள்ளே இருந்தவர் மெதுவாகப் பேசிக் கொண்டே வந்தார். வீக்லியைப் பையனிடம் கொடுத்துவிட்டு அவர் கட்டியைப் பற்றி விசா

ரித்து விட்டு அவன் உள்ளே சென்றான். அவன் உள்ளே வந்ததும் டாக்டர் கதவைச் சார்த்தினார்.

டாக்டர் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு எதிரில் சிறிய மேஜை இருந்தது. அதில் எனமல் தட்டில் இருந்த பஞ்சில் இருந்த ரத்தம் அவனைக் கவர்ந்தது அதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"உட்காருங்கள்" என்றார் டாக்டர்.

அவன் டாக்டர் அருகில் இருந்த ஸ்டூலில் உட்கார்ந்தான். டெலிபோன் இருந்தது. அந்த மின் விசிறியின் நிழல் கண்ணாடித் தடுப்பையும் அடிக்கடி வருடிக்கொண்டிருந்தது.

"என்ன உங்களுக்கு"

"டாக்டர் நான் உங்களுடன் பேசவேண்டும். என் பெயர் சீனிவாசன். சாதாரணப் பெயர்! எனக்கு ஏதும் ஜுரமில்லை. ஜலதோஷமில்லை. நான் பக்கத்துபில்டிங்கில் இருக்கிற பாங்கில் வேலை செய்கிறேன். அங்கே நான் ஒரு காம்ப்ட்டாமீட்டர் ஆப்பரெட்டர். எனக்கு ஒருவிதமான பயம் இருக்கிறது."

டாக்டர் அவனையே பார்த்துக்கொண்டு அவன் மேலே பேசக்காத்திருந்தார்.

காம்ப்ட்டாமீட்டர் என்கிறது கூட்டல் யந்திரம் மிஷின். சென்ற ஒன்பது வருஷங்களாக நான் அந்த யந்திரத்திலே கூட்டல் செய்திருக்கிறேன். அதுதான் என் வேலை. எண்கள் எண்கள் எண்கள். அனுமார் வால் போல அன்றன்றைக்கு ட்ரான்ஸாக்ஷன்களை எல்லாம் அதில் டைப் அடித்துக் கூட்டிக் கொண்டே இருக்கவேண்டும் ஒரு நாளைக்கு எட்டு மணிநேரம் ஒருவாரம் ஒரு மாதம் ஒரு வருஷம் ஒன்பது வருஷம் எத்தனை எண்கள்!

டாக்டர் எனக்கு எப்படி இதைச் செய்வது என்று தெரியவில்லை. எனக்குக் கல்யாணம் ஆகி பத்துவருஷமாகிறது. எனக்குக் குழந்தை கிடையாது. என் மனைவி என் வீடு என் ஆபீஸ் என் காம்ப்ட்டாமீட்டர். தினம் மனைவியிலிருந்து விடுபட்டு ரயிலேறி எண்களாக எட்டுமணிநேரம் எண்ணிவிட்டு மனைவிக்குத் திரும்பி மனைவியுடன் பேசிவிட்டு சாப்பிட்டுவிட்டு உறங்கி விட்டு மறுபடி விடுபட்டு மறுபடி எண்களைத் துரத்தி மறுபடி.........

டாக்டர் நான் உங்களிடம் வந்ததே சரியா என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்கு எப்படிப்பட்ட உதவி தேவை என்பதும் தெரியவில்லை. எந்தவிதத்தில் உங்களைப் போன்ற ஜெனரல் ப்ராக்டிஷனர் எனக்கு உதவி செய்யக்கூடும் என்பதும் தெரியவில்லை. இருந்தும் என்னிடம் ஏதோ தப்பு ஏற்பட்டிருக்கிறது டாக்டர். இன்றுகாலை 9:06 ட்ரெய்னில் நல்லகூட்டம். வாயிற்பக்கம் கம்பியை இரண்டுகையாலும் தொத்திப் பிடித்துக்கொண்டு மற்றவர்களுடன் என் காம்ப்ட்டாமீட்டர் நோக்கி விரைந்து கொண்டிருந்தபோது விர் விர் என்று எலக்ட்ரிக் கம்பங்கள் அருகே அருகே கடக்கும் போது எனக்கு திடீர் என்று அந்த ஆசை மிகக்கவர்ச்சிகரமான ஆசை ஏற்பட்டது! கை எதற்காகப் பிடித்துக்கொண்டு எதற்காக இப்படித் தொத்திக்கொண்டு எங்கே போகிறேன்! ஏன் நான் கையை விட்டு விட்டால் என்ன? அவ்வளவு தீவிரமாக அந்த ஆசை ஏற்பட்டது. அப்படியே கையை விட்டுவிட்டு அந்த வேகமான வண்டியிலிருந்து விலகி விழுந்து விடுவதற்கு. ஒரு கணம் அந்த ஆசையின் தீவிரம் என்னை ஆட்கொண்டு என் கைகள் சக்தியில்லாமல் போக திடீரென்று சுதாரித்துக் கொண்டேன். ஒரே ஒரு கணம் தான் அந்த ஆசை இருந்தது. உடனே போய்விட்டது.

டாக்டர். நான் உங்கள் நேரத்தை அதிகம் விரயம் பண்ணவில்லை என்று நம்புகிறேன். அந்த ஆசை மறுபடி சாயங்காலம் சற்றுமுன் எனக்கு ஏற்பட்டது. ஓவர்டைமில் என் ஆபீஸில் தனியாக இருந்தேன். மூன்றாவது மாடியில் இருக்கிறது அந்தஅறை. நானும் என் காம்ப்ட்டாமீட்டரும் தரையில் புரண்டு புரண்டு சுருண்டிருந்த காகிதத் தொடரில் என் விரல்கள் பதிப்பித்த எண்களும்......

நிமிர்ந்து பார்த்தேன். பெரிய ஜன்னல் தெரிந்தது. வானம் தெரிந்தது. ஜன்னல் திறந்திருக்கு. காற்றில் ஆடின ஜன்னல் திரை என்னை வாவா என்று அழைத்தது. அந்த அழைப்பை என்னால் எதிர்க்கமுடியவில்லை. நடந்து சென்று ஜன்னல் விளிம்பில் ஏறி நின்றுகொண்டு கீழே தங்கசாலையில் ஊர்ந்து கொண்டிருந்த வாகனங்களின் மத்தியில் சொத்என்று காக்கை எச்சம் போல் விழ எவ்வளவு ஆசையாக இருந்தது தெரியுமா? இப்பொழுதும் ஒரு கணம்தான். அதற்குள் கை நடுங்கி வியர்த்து கண்ணாடிக் கதவைப் பிடித்துக் கொண்டு சமாளித்து விட்டேன். உடனே நான் தீர்மானித்துவிட்டேன். என்னில் ஏதோ தப்பு இருக்கிறது. உடனே நான் டாக்டரைப் பார்க்க வேண்டும் என்று தோன்றிவிட்டது. ஆபீசுக்கு மிக அருகில் இருக்கும் உங்களைத் தேடி வந்துவிட்டேன்!

டாக்டர். உங்களிடம் எவ்வளவோ சொலல்வேண்டும் என்று நினைத்து வந்தேன். பாதி கூடச் சொல்லவில்லை. அந்த பயம் ரொம்ப உண்மையான பயம். அப்படியே ஒரு புயல்காற்றுபோல ஒரு போர்வை போல என்னைச் சுற்றிக் கொள்கிறது. இன்று நிச்சயம் அந்தஜன்னலிலிருந்து குதித்திருப்பேன், சமாளித்துக் கொண்டு விட்டேன்......எப்படிச்சொல்வது எப்படி.....

அவன் கை நடுங்கியது. சிரித்தான். டாக்டர் 'புரிகிறது' என்றார். அவன் சட்டைப் பித்தானை

---

கரகரத்த உன் குரல்
கதிரியக்கத் தாது எனக்
காதில் பாயும்;
ஊர்ந்து உதறும் உன் உடல்
உயிரியக்க வேகமென
மனசில் படும்.

ஆத்மாவின் அழுகுரலாய்,
அபசாரத் தீங்கொலியாய்
வறண்ட சில வயோதிகர்
வர்ணிப்பர் உன்பாட்டை.

சாத்திரம் கெட்ட நாம்
உன் நாதக் குலைவினை
சாதனையாய் ஏற்றிடுவோம்.

நாதம் பிரம்மம் எனில்
நாதக்குலைவுதான் என்ன?

—ஐராவதம்

## என்னுடைய மேட்டுநிலம்

என்னுடைய மேட்டுநிலம்
நேற்றுப் பெய்த மழையில்
குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தது

என்னுடைய மேட்டுநிலத்தை,
இன்றைய வெயில்
நெருப்பால் வருத்திக் கொண்டிருக்கிறது

(என்னுடைய மேட்டுநிலம்
நாளைய 'வெறுமையில்'
தவம் புரிந்து கொண்டிருக்கும்)

என்னால்—அதன்
எல்லா அனுபவங்களையும்
உணர முடிகிறது

ஏனென்றால்,
இறந்துவிட்ட—என்னை
அதில்தான் புதைத்திருக்கிறார்கள்

—கலாப்ரியா

---

# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ்: 30 காசு

ஆண்டுச் சந்தா: ரூ. 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7 தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப்பெற போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்கவும்.

ஆசிரியர் 'கசடதபற'
1 தேவடி தெரு
சென்னை 4

அவிழ்க்கச் சொன்னார். ஸ்டெதாஸ்கோப்பை வைத்து அவன் இருதயத்தைக் கேட்டார். அவன் ரத்த அழுத்தத்தை எடுத்தார். இரவில் சரியாகத் தூங்குகிறாயா என்று கேட்டார். அவன் தூங்குகிறேன் என்றான். காலை ஒழுங்காக மோஷன் ஆகிறதா என்றார். அவன் யோசித்து ஆமாம் என்றான். அவன் கவனம் அந்த ரத்தப் பஞ்சில் நின்றது. டாக்டர் சொன்னார் "உன் ரத்த அழுத்தம் சரியாகத்தான் இருக்கிறது. எல்லோருக்கும் இந்த ஃபெடிக் வரும். இப்பொழுது என் கேஸையே எடுத்துக்கொள். நான் மாலை நேரம் கூட சுதந்திரமாக வெளியில் சென்றதில்லை. இந்த இடத்தில் 6லிருந்து 8-30வரை. வீட்டில்போனால்பேஷண்ட்கள். அதற்கு முன் பேஷண்ட்கள். காலை. மாலை. உனக்கு காம்ப்ட்டாமீட்டர். எனக்கு பேஷண்ட்கள். எனக்கும் ஒருநாள் எல்லாவற்றையும் உதறி எறிந்து கிராமத்துக்குப் போய்விடலாமா என்று தோன்றும். எனக்கு முடியாது. பிழைப்புப் போய்விடும். உனக்கு முடியும். நாளைக்கு ஆபீசுக்கு போகாதே. அவசியம்லீவ் எடுத்துக்கொள். ஒரு மாதம் இல்லை இரண்டு மாதம். சர்ட்டிபிகேட் வேண்டுமானால் தருகிறேன். உனக்கு வேண்டியது மாறுதல். டெலிபோன் மணி அடித்தது" எடுத்துக் கேட்டார் ம் ம் ம் என்றுதான் திரும்பத்திரும்பச் சொன்னார். கடைசியில் மட்டும் சரி என்றுசொல்லிவிட்டு வைத்தார். அது என் மனைவி என்றார். டெலிபோனில் பேசிக்கொண்டிருக்கும் போதே காகிதத்தில் எழுதிமுடித்துவிட்டார். சரக் என்று கிழித்தார் "இந்த டானிக்கை சாப்பாட்டுக்குப்பின் இரண்டு டீஸ்பூன் சாப்பிடு. ஒரு பாட்டில் சாப்பிட்டுவிட்டு என்னை மறுபடி வந்துபார் என்று அவனிடம் அந்தக் காகிதத்தைத் தந்தார்.

அவன் அந்தக் காகிதத்தை பிரமிப்புடன் பார்த்துப் படிக்க முயன்றான்.

டாக்டர் அவன் எழுந்து செல்லக் காத்திருந்தார். "டாக்டர் நான் உங்களுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும்?"

"ஐந்து ரூபாய்" என்றார்.

அவன் தன் பையில் தடவி சில ரூபாய் நோட்டுக்கள் சில எட்டணா நாலணா பத்துபைசா நாணயங்கள் என்று சேர்த்துக் கூட்டிப் பார்த்து "என்னிடம் நாலு ரூபாய் 30பைசாதான் இருக்கிறது" என்று மன்னிப்புக் கலந்த குரலில் பயத்துடன் சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு மேஜை மேல் அவ்வளவு பணத்தையும் வைத்தான். டாக்டர் சரி என்றார்.

அவன் அந்தக் கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்றான்... உடனே உள்ளே வந்த அந்தப் பெண் தன் கையில் போர்த்தி அணைத்திருந்த குழந்தையை ஜாக்கிரதையாகத் திறந்து, "காலையிலிருந்து விட்டு விட்டு ஜுரம் அடிக்கிறது டாக்டர் ஒரு தடவை வாயிலெடுத்துவிட்டான் கண்ணைத் திறக்காமல்ஜுரம் அப்பொழுது டாக்டர் மறுபடி ஸ்டெதாஸ்கோப் அணிந்து கொண்டார். அந்தக் குழந்தையைப் பரிசோதித்தார்அதன் வயிற்றை அழுத்திப் பார்த்தார்.

"இருமல் இருக்கா"
"இல்லை டாக்டர்"
"பேர் என்ன?"
"சுரேஷ்...... சுரேஷ் டேய். டாக்டர் மாமாடா!"
"வயசு?"
"நாலு"

டாக்டர் எழுதிக் கொண்டிருக்கையில் வெளியே சாலையில் அபஸ்வரமாக அந்த சப்தம், மிக அவசரமாக ப்ரேக் போடுவதால் டயர் தேயும் சப்தம்கேட்டது.

# ஆதிமூலத்தின் ஓவியப் பார்வை

கி. அ. சச்சிதானந்தம்

அண்மையில் சென்னை சரளா ஆர்ட் சென்டரில் நடந்த ஆதிமூலத்தின் ஓவியக் காட்சியைக் காண்பதற்கு நடந்து போய்க் கொண்டிருக்கும்போது "நீ எதைத் தொடுகிறாயோ அதை நீ பிரச்சனையாக்கி விடுகிறாய். ஆகையால் அதிலிருந்து விடுபடுவதற்கு நீ முயற்சி செய்ய வேண்டாம். புரிந்துகொள். புரிந்து கொள்வதில்தான் பிரச்சனையின் தீர்வு இருக்கிறது" என்று கிருஷ்ணமூர்த்தி எங்கோ ஓரிடத்தில் சொன்னது திடுமென நினைவுக்கு வந்தது. உடனே, அந்த நினைப்பைப் பின் தொடர்வதில் மனம் ஈடுபட்டது. புதுப்பாணி ஓவியங்களை அனுபவிப்பதில் பிரச்சனை இருப்பது பளிச்செனத் தோன்றிற்று. இந்நினைப் போடு சரளா ஆர்ட் சென்டரில் நுழைந்து ஆதிமூலத்தின் அண்மைக்கால ஓவியங்களைப் பார்த்தபோது எனக்கு நானே `புதியவனாகிவிட்டதை உணர்ந்தேன் நடந்த ஐந்தாண்டுகளாக சென்னையில் நடக்கும் மாடர்ன் ஆர்ட் பெயிண்டிங் காட்சிகளை, நானே மேற்கொள்ளும் பயிற்சியாகவும், கலை அனுபவத் தேடலாகவும் பார்த்துக்கொண்டு வந்திருக்கிறேன். ஆதிமூலம், தாமோதரன், காலம்சென்ற பத்மினி இவர்களின் ஓவியங்களை அவரவர் வீட்டிற்கும் சென்று பார்த்திருக்கிறேன். எனக்குத் தெரிந்த வரையில்—அதாவது ஓவியங்களைப் பற்றிய நூல்களையும், கலைப் புத்தகங்களையும் படித்ததாலும், தாமோதரனிடம் உரையாடிய கருத்து மோதல்களினாலும் எனக்கு ஏற்பட்ட கலைச் சுவையிலும்—இவர்கள் சிறந்த இளம் ஓவியர்கள். இவர்களின் கலைப் படைப்புகளில் ஆழ்ந்த ஈடுபாடும், அன்யோன்யமும் எனக்கு உண்டு. இவர்களின் ஓவியங்களை என்னை அறியாமல் நெடுநேரம் பார்த்துப் பார்த்துப் பழகிப் போனவன் நான். என் நினைவில் அவை திடுமெனத் தோன்றும்போது நான் மன அசை போடுவதுண்டு. நான், என்னை ஏன் என்றும் கேட்டுக் கொள்வதுண்டு. மற்றவர்களுக்குப் புரியும்படி என்னால் சொல்லில் மாட்டி இழுத்து 'பகுத்தறிவுப் பண்டமாக' இதைக் கொடுக்கமுடியாது. முயற்சித்தும் பார்த்திருக்கிறேன். எழுதி எழுதிப் பார்த்ததில் சொல்ல வேண்டியது—அதாவது சொல்லாமல் விட்டது—ஆழமாகப் போகிறது. மொழியில் எவ்வளவு தூரம் போக முடியும்?

இந்தக் கலை விவகாரம், அதுவும் குறிப்பாக ஓவியம் இருக்கிறதே அது அவனவன் நேரடியாகப் பார்த்து அனுபவிக்க வேண்டியது. என்னதான் ஆர்ட் கிரிடிக்—கலை விமரிசகர்-கரடியாகக் கத்தினாலும் கலைப்படைப்பின் அனுபவத்தைக் கொடுக்க முடியாது. ஓர் ஆனந்த குமாரசாமியோ அல்லது ஆண்டிரி மால்ராவோ சிறந்த படைப்பு இது என்று விரல் நீட்டி வழி காட்டத்தான் முடியும். சுவையை ஏற்ற முடியாது. அதனால், அது கலை விமர்சகனின் தோல்வியுமாகாது. அவன் வேலை அது அல்ல. கலைக்கும் நமக்கும் இடையில் நிற்பவன் அல்ல அவன். நம் பக்கத்தில் நம் தோள்மேல் கை போட்டுக் கொண்டு நின்று சைகை காட்டுவான். நாம்தான் நடந்து அருகில் போக வேண்டும். அந்த ஓவியப் படைப்புகளை நேராகப் பார்க்குமுன் அதைப்பற்றி எத்தனை புத்தகம் படித்தாலும், ஓவிய விமர்சனங்களை அறிந்து கொண்டாலும் பயன் இல்லை. அப்படியென்றால், பிக்காசோ, பிராக், பிரான்டுசி—ஐரோப்பிய மேதைகளின் கலைப் படைப்புகளை நாம் நேரடி ஒரிஜினல்களை பார்க்காததினால் நம் அனுபவம் குறையுள்ளதாகாதா? ஆமாம் என்றுதான் சொல்ல வேண்டும். வருத்தம்தான். ஆனால், அது உண்மை.

மாடர்ன் ஆர்ட்டை, கிண்டலும் கேலியும் செய்து கொண்டிருந்த போதிலும் அது வளர்ந்து கொண்டேதான் வருகின்றது. அதற்கு 'பகுத்தறிவு பூர்வமாக' எதிர்ப்பும் தெரிவிக்கப்பட்டு இருக்கிறது. அதன்மேல் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளில் ஆதாரமானதாகக் கருதப்படுவது அதில் கம்யூனிகேஷன் இல்லை என்பது. "கம்யூனிகேஷன் இல்லை"—இதன் விளக்கம்?

ஓவியன் தன் படைப்பின் மூலம் என்ன சொல்ல வருகிறான்? அவன் சொல்வதை பார்ப்பவனால் அறிந்து கொள்ள முடிகிறதா? கேள்விகள் மிகவும் நியாயமாகவும் அறிவு பூர்வமாகவும்தான் இருக்கின்றன. கேள்வியைக் கொஞ்சம்—கொஞ்சம்தான் கிளறிப் பார்க்கலாம். ஏனென்றால், கேள்விக்கு ஆணிவேர், சல்லிவேர்கள் பலவுண்டு. கிளறத் தொடங்கினால் பல சூரியன்கள் உதித்து அஸ்தமித்து உதித்துக் கொண்டிருக்கும். சுருக்கமாகச் சொன்னால் மாடர்ன் ஆர்ட்—புதுப்பாணி ஓவியங்களை, குருடனைத் தவிர மற்ற எல்லோர் கண்களுக்கும் தெரிவதைப் படம் பிடிப்பவை அல்ல. அந்த வேலையை அதி அற்புதமாக காமிரா செய்துவிடுகிறது.

மாடர்ன் ஆர்டின் கண்கள் வெளியே பார்த்து இருக்கவில்லை. அவை உள்ளே பார்த்துக் கொண்டிருக்கின்றன. அவை நெற்றிக் கண்களல்ல. நெஞ்சக் கண்கள். அக உலகம். அதை அறிந்தவர்களுக்கு அனுபவித்தவர்களுக்கு ரசனைக்கு எல்லை கிடையாது. ஆதி அந்தம் இல்லை, என்பது தெரியும். அவர்கள் கம்யூனிகேஷன் இல்லையே என்று சொல்வதில்லை. மாடர்ன் ஆர்ட்டைப் பற்றிய படிப்பறிவும், பார்த்துப் பயிற்சிப் பழக்கமும் இருந்தால்போதும், அதை என்னவென்று புரிந்துகொள்ள முடியும். ஒருவனால் அனுபவிக்க முடியாத அபிமான நடிகைகளின் படங்களை நீண்ட நேரமோ அல்லது அடிக்கடியோ புணர்ச்சிக் கற்பனையோடு அல்லது வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தால் அவர்களின் அழகில் அவனுக்கு திகட்டல் ஏற்பட்டுவிடுகிறது. ஆனால், பிகாசோவின் 'கண்ணாடியின் முன் அவள்' ஓவியத்தைப் பார்ப்பதில் சலிப்பே ஏற்படுவதில்லை. ஆழமாகப் பார்க்கப் பார்க்க என்னென்னவோ நம் மனதிலிருந்து கிளம்பிவருகின்றன.

மாடர்ன் ஆர்டின் அடிப்படை, உணர்ச்சியா, அழகா, உணர்ச்சியின்மையா, அல்லது வக்கிரமா? எது வென்று கூறமுடியாது. ஏனெனில் உணர்ச்சி, அழகு, உணர்ச்சியின்மை, வக்கிரம் இவை என்னவென்று விளக்கப்படவேண்டும். நாம் சாதாரணமாக நினைப்பது போல், அர்த்தம் கொள்வது போல் அல்ல இவை. அர்த்தத்தைத் தேடி எங்கெல்லாமோ போயாக வேண்டும்.

இன்றைய மனித சமூகம் மாறிக்கொண்டே இருக்கிறது. அதற்கு ஏற்ப அவன் உள்ளத்திலும் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டு வருகின்றன. அந்த

மாறுதல்களை கலைஞன்—இங்கே ஓவியன்—காட்டுகிறான் என்று சொன்னால் அது'வும் கொச்சையாகத் தான் முடிகிறது. இவர்களை அகவுலக மாந்தர்கள் என்று சொல்லலாம்.

மேலே சொன்ன இந்த மனத்தோடுதான் ஆதிமூலத்தின் ஓவியங்களைப் பார்த்தேன். அவருடைய கடந்த நான்குஅல்லது ஐந்தாண்டுகால ஓவியங்களைப் பார்த்தவன் நான். இந்த ஆண்டு ஓவியக் காட்சியில் இடம்பெற்ற இவர் ஓவியங்களை 'வளர்ச்சி' என்று சொல்லமுடியாது. அப்படிக் கூறுவது என் மூட்டாள் தனமாகும். என்ன? தன்னிலிருந்து மாறுபட்டு இருக்கிறாரா? அதெல்லாம் ஒன்றுமில்லை. ஏற்பட்ட அனுபவத்திற்கு விளக்கம் தேடி வடிவம்கொடுத்திருக்கிறார். 'அனுபவம்' ஆண்பாலும் இல்லை; பெண் பாலும் இல்லை. இரண்டும் கொண்டதும் அதனாலே கெட்டதுமான அலியுமில்லை. 'அது' இருப்பதை மறுக்க முடியாது. இன்னதென்று சொல்லமுடியாது. இன்னதென்று சொல்ல முடியாததான 'அது' வடிவங்களாக, ஓவியங்களாக வரவழைக்கப்பட்டிருக்கிறது.

இவற்றிற்கு வேண்டுமென்றேதான் அவர் பெயர் சூட்டவில்லை. ஓவியத்திற்கு பெயர் வைத்தாலே அது ஓர் எல்லைக்குட் படுத்தப்பட்டு விடுகிறது. அதுவும் மாடர்ன் ஆர்டில் 'ஓவியப்பெயர்' அர்த்தத்தின் ஆழத்தையே அறுத்துவிட்டிருக்கிறது பல சமயங்களில். இந்த ஓவியங்களைப்பற்றி பலநூறு பக்கப் புத்தகம் ஒன்றை எழுதமுடியும். ஆனால், அதனால் அவற்றை நேரடியாகப் பார்ப்பதால் ஏற்படும் மன இயக்கத்திற்கு ஈடுகொடுக்க முடியாது. கலையில் அவனவன் அனுபவம்தான் முக்கியமும் அர்த்தமும். இந்த ஓவியங்கள் என்னை 'தியானம்' செய்யச் செய்தன.

வட்டமாக, சிவப்பு நிறம் நெருப்புச் சக்கரமாக இருக்கிறது. அதற்குள் நீலச் சதுரம். அதற்குள் வெள்ளை வட்டம். அதற்குள் செந்நிறவட்டம். அதற்குள் இரு மனிதத் தலைகள் பக்கவாட்டப் பார்வையில் பிரிந்து நான்குகண்களும் சங்கிலிபோலஇருக்கின்றன. அதன்கழுத்து நீலநிற லிங்கத்தின் மேல் இருக்கிறது. அந்த லிங்கத்திற்குள் "ஆட்டின்" செந்நிறமாக இருக்கிறது.

கீழே இருவெண்நிறப் பாதங்கள். அரை வட்டத்தில் அங்கங்கே இணை இணையாகப் பாதச் சுவடுகள்.

இன்னொன்று பெரிய, சாம்பல் நிறம் கலந்த வெள்ளை வட்டத்தில் இரு செந்நிற ஒளிவட்டங்கள். பெரிய வட்டத்தின் அடியில் கருப்பு வளையத்தை மாட்டிக்கொண்ட செந்தூர ஒளிவட்டம். அதன் தலையிலிருந்து கிளம்பி இருபக்கங்களில் வளரும் ஐந்து விரல்களைக் கொண்ட வடிவம். இந்தச் செந்தூர வட்டத்திலிருந்து செங்குத்தாய் ஒன்றின் மேல், நீல மூட்டத்தில் மங்கலாகப்போன இணை இணையான முகங்களும் நீட்டிய கரங்களும் இருக்கின்றன.

மாதிரிக்காக இரண்டு ஓவியங்களைப்பற்றி மிகச் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறேன். இந்த ஓவியங்கள் பார்க்கப்பட வேண்டியவை; சொல்லப்பட வேண்டியவை அல்ல.

"ஒரு படைப்பை ஆக்குவது ஓர் உலகத்தையே உண்டு பண்ணுவது ஆகும்" இது காண்டன்ஸ்கி சொன்னது. ●

## மனக் கழுதை

காலச் சேற்றை
கால் படாநடந்து
பாசப் பள்ளம்
பரிதி தாண்டி
உறவு மணலில்
ஒட்டிய தெல்லாம்
உதறித் தள்ளி
வாழ்க்கை ஆற்றை
வறுமைச் சுமையுடன்
ஆவலாய் நீந்தி
அமைதி துறையில்
ஆணவச் சோப்பை
அழுந்த தேய்த்து
சுருக்கென மூழ்கினால்
ஒரே எண்ண நுரை
கரைந்தது சோப்பா?
அழுக்கா?

—குமரித்துறைவன்

## காந்தி

இந்நாளில்
இந்தியர்க்குச்
சிக்கியதோர்
சீதக்காதி.

—ட்டி. ஆர். நடராஜன்

## தெரு மரங்கள்

வேற்றூர்ப் புழுதியை
வீசிப் போகும்
வண்டிகளுக்குப் பூவிட்டு
வணங்கும் மரங்கள்

—ந. மகாகணபதி

# கைமாற்றுக்கு இருவர்

'தீபப்ரகாசன்'

போஸ்லே திடீரென்று மேசைக்கு ரொம்பவும் கிட்டேவந்து மேலே விழாத குறையாக நின்ருன். சிவராமனுக்கு ஆச்சரியமாயிருந்தது. ஓரளவு அருவருப்பாகவும் இருந்தது. பீடி நாற்றம் சகிக்கவில்லை. "நீயா?" என்ருன்.

எங்கேயோ திருநெல்வேலிக்காரனைத் தூக்கி மகாராஷ்டிரத்தில் போட்டார்கள். எப்படியோ பணம் சேர்க்க வேண்டும் என்று வயிற்றுப் பிழைப்புக்கு வந்த இடத்தில் மொழியே ஒரு பிரச்னையாகிவிட்டிருந்தது சிவராமனுக்கு. மராட்டி கஷ்டமாயிருந்தது இந்தி சுலபமாக இல்லை. கூட வேலை செய்கிறவர்களோடு இங்கிலீஷில் பேசிக்கொள்வதில் சிரமம் இல்லை. பியூன்களோடும் ஜனங்களோடும் பேசுவதில்தான் கொஞ்சம் கஷ்டம்.

"நாலு இந்தி ஸினிமா பார். இந்தி சுலபமாக வந்துவிடும்" என்று ஆபீசர் அம்பவடேகர் யோசனை சொல்லியிருந்தார். படங்கள் நிறையப் பார்த்தாகிறது. பாஷைதான் அபிவிருத்தி ஆனபாடில்லை.

பியூன்களில் சுகாராம் போஸ்லேதான் சற்று நெருங்கிப் பழகினன் என்று சொல்ல வேண்டும். மீதிப்பேரைவிட அவன் வயதானவன். இவனுக்கு வேலை கூட அவன்சில நேரங்களில் சொல்லிக்கொடுத்தான். அதோடு ம்ற்றவர்களைவிட இந்தியும் கொஞ்சம் சரளமாகப் பேச வந்தது அவனுக்கு.

போஸ்லேவை எப்போது பார்த்தாலும் ஏதோ பறி கொடுத்துக் கொண்டிருப்பவன்போல ஒரு அனுதாபம் சிவராமனுக்கு ஏற்பட்டது. இது எப்படி ஏற்பட்டது என்று இவனுக்கே புரியவில்லை. இங்கு வந்த சில நாளிலேயே இப்படி ஏற்பட்டது.

முதலில் இவனை ஆபீஸுக்கு வருகிறதபால்களைப் பதிவு செய்வதும் வெளியே போகவேண்டிய தபால்களைத் தயார் செய்வதுமாகிய பிரிவில் வேலை கற்றுக் கொள்ளும்படியாக ஆபீசர் சொல்லியிருந்தார். அங்கே அப்போது ஹசரநானி வேலை செய்து கொண்டிருந்தாள். அவள் ஆங்கிலம் இந்திபோல, இந்தி சிந்தி போல இருக்கும். அவளைத் தக்காளிப்பழம் போல என்று வாடர்பாய் வாகடே சொல்வான்.

திருநெல்வேலிச் சீமையில் கோஎஜுகேஷன் காலேஜ் கிடையாது. பிற்பாடு சிவராமனுக்கு இந்த அனுபவம் ஏற்பட்டதில்லை. அவன் டைப்கற்கப்போன போது அவன் ஷிப்டில் அவனுக்கடுத்த மெஷினில் படபடவென்று ஒருத்தி தட்டவருவாள். அவள் தட்டுவாள். இவன் தடுமாறுவான். பிறகு லஜ்ஜையை விட்டு இன்ஸ்ட்ரக்டரிடம் சொல்லி ஷிப்டைமாற்றிக் கொண்டான்.

ஆனல்ஹசரநானிக்கு அனுபவமில்லாமலா இருந்திருக்கும்? இந்தப் பட்டணச் சீமையில்? எத்தனை பையன்களின் நடுவிலே படித்தாளோ? எத்தனை ஆபீசுகளில் வேலை பார்த்தாளோ? ஹலோ என்று இவனை இங்கே கூவினல், பதிலுக்கு மூலைக்கு மூலை போட்டிமேல் பதில் வரும். இவனுக்குத் தபால பிரிப்பது, ஸ்டாம்ப் ஒட்டுவது எடை போடுவது என்று அவள் சொல்கையில், விரல்கள்தான் மனசில் படிந்தன. "கவர்...யூடோன்ட்பாதர்! போஸ்லே வில் பேஸ்ட்" என்று சொல்லிவிட்டு, லதா உம்ரிகரிடம் வம்பளக்ககிளம்புகையில்மேல்துணி—சல்வாரா, கமீசா ஃபேன் காற்றில் இவன் கழுத்தைத்தடவும். மறுபடி அந்த விரல்கள்தான் நினைவு வரும். ஆனலும் தன் சித்தப்பாவுக்கு மறவாமல் கடிதம் எழுதிக்கொண்டிருந்தான் சிவராமன்.

"க்யா?" என்ற கேள்விக்கு போஸ்லேவின் பதில் இந்தியில் - ரொம்ப நீளம். "மாதாஜி பீமார். தவா கேலியே பைஸா. ." என்பது புரிந்தது. அம்மாவுக்கு ஸீரியஸ் மருந்து வாங்கப் பணம்.

எவ்வளவு சுலபமாகக்கடன் கேட்கிருர்கள் இவர்கள். சே—எனக்குக் கடன்தரும் வழக்கம் இல்லை என்று சொல்லிவிடலாமா? சே—

"கொஞ்சநேரம் கழித்து வா" என்றனுப்பினன். இப்போதைக்குத் தொல்லை இல்லை. சாப்பிட்டுவிட்டுக் கை அலம்பப்போன இடத்தில் ஐயர் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் துணை ஆபீசர். பணம் கொடுத்தால் திரும்பிவருமா என்று கேட்டான்.

"இந்தத்தோல் பயல்கள் ஆபீசுப் பெண்களுக்குக் கடுதாசி கொடுத்தனுப்ப இந்தக் கிழவன் போஸ்லேக்கு" என்று ஆரம்பித்தான் ஐயர்.

கடுக்கென்று கடித்தபடி டிபன்பாக்ஸ் அலம்ப ஹெட்கிளார்க் பட்கேவாடிகர் வரவே, ஆரம்பித்ததை அப்படியே அந்தரத்தில் விட்டு ஐயர் அகன்ருன்.

பட்கேவாடிகர் புன்னகைத்தார்: "ஹலோராம்!" சிவராமன் மூக்கைத் துடைத்துக் கொண்டான். பட்கேவாடிகர், "கடுதாசி அனுப்பி முதுகில் டின் கட்டிக்கொண்ட முதல் ஆள் ஐயர்" என்று சொன்னபோது சிவராமனுக்குத் தூக்கிப் போட்டது. ஒட்டுக் கேட்கிறவரா இந்த ஆசாமி?

சீட்டில் உட்கார வருகையில் லதா உம்ரிகரிடம் பேசிச் சிரித்தபடி வெளியேயிருந்து உள்ளே வரக் கண்ணடிக் கதவைத் திறந்த ஹசரநானி இவனைப் பார்த்துச் சிரித்தாள். கதவுப்பிடியில் அந்த விரல்கள் விரிந்தன.

டிராயரில் கையை விட்டான். அவன் எழுதிய சீட்டு வந்தது—

"Dear Hazranani,

Shall we go to a picture this Saturday evening? —Shivram". இவனுடைய கையெழுத்து அபாரமாயிருக்கும்.

"சாஹப்". போஸ்லேதான் சிந்தனையைக் கலைத்தவன். பான்ட் ஜேபியில் கைவிட்டுப் பணத்தைக் கொடுத்தான். போஸ்லே போனவன்—

பத்தாவது நொடியில் திரும்பிவந்து மேசைமேல் வைத்தான், ரூபா நோட்டுகளையும்,— அடகடவுளே! அந்தக் கடிதத்தையும்.—அது எப்படி அவன் கையில் போயிற்று.

அதே பறி கொடுத்துக் கொண்டிருக்கும் கண்களோடு போஸ்லே சொன்னன்: "ஸாஹப், உங்களுக்கு ரொம்பச் சின்ன வயசு. உங்களுக்கு 'இது' எல்லாம் வேண்டாம். எனக்கும் உங்க காசு வேண்டாம்"—

பிறகு சிவராமனல் ஒருவாரம் ஆபீஸ் போக முடியவில்லை. ஏன் திடீரென்று ஜுரம் வந்தது என்றும் அவனல் நிதானித்துக்கொள்ள முடியவில்லை. ●

# ஓலூலூவுக்கு ஒரு பதில்

ஒலூலூ இலக்கியத்திற்குப் புறம்பான விஷயங்களை முன் நிறுத்தி இலக்கியத்தை விமர்சிக்கிறார். இலக்கியம் அறிவியல் இல்லை என்பது அவருக்குத் தெரியவில்லை. இலக்கியத்தில் முடிந்த முடிவுகள் ஏதுமில்லை. பற்றிக்கொண்டு மேலே செல்வதற்குப் படிகள் இல்லை; கீழே செல்வதற்கும் படிகள் இல்லை. டால்ஸ்டாய் படிப்பு, தாஸ்தாவெஸ்கி ஆராய்ச்சி ஒருவனை எழுத்தாளனாக்கிவிடாது; பேராசிரியனாக்கும். பணம் பண்ணும்; வேலை வாங்கிக் கொடுக்கும். மேல் நாட்டில் எத்தனை இலக்கியப் பேராசிரியர்கள். அத்தனை பேரும் முறையான படிப்புப் படித்தவர்கள்—ஆராய்ச்சியாளர்கள்தான். ஆனாலும் என்ன பிரயோசனம். போதிக்கத்தான் பயன்படுகிறார்கள். நம் நாட்டில் எத்தனை தாகுர் பேராசிரியர்கள், எத்தனை சமஸ்கிருதப் பண்டிதர்கள், எத்தனை தமிழ்ப் பண்டிதர்கள், எத்தனை ஆங்கிலப் பண்டிதர்கள். தாகுர் பண்டிதர்களால் தாகுருக்குக் கேடு தவிர வேறென்ன ஏற்பட்டு இருக்கிறது. தமிழ்ப் பேராசிரியர்களால் ஏற்பட்டிருக்கும் கேடுகள் அனந்தம். வையாபுரிப் பிள்ளைக்குப் பிறகு (வக்கீலான இவர் பிறகு தமிழ்த் துறைக்கு வந்தார்) தமிழ் ஆராய்ச்சித்துறை எப்படிமுடங்கிக்கிடக்கிறது. கு. அழகிரிசாமி கம்ப ராமாயணப்பதிப்பு மாதிரி ஒரு பதிப்பை எந்தப் பேராசிரியரும் வெளியிட முடியுமென்று எனக்குப் படவில்லை. பேராசிரியர்களுக்கு படிப்பு—ஆராய்ச்சி பணம் பண்ணும் சாதனம். கு. அழகிரிசாமிக்கு அது வாழ்க்கை. அதனால்தான் அவரால் சாத்தியமாகியது. அற்புதமான சிறு கதைகள் எழுதிக் கொண்டும்—காவடிச் சிந்தைப்பதிப்பிக்கவும்முடிந்தது. இதை பொது விதியாக்க முடியாது. பேராசிரியர் மு. வரதராசனால் நாவல் எழுதமுடியவில்லை என்பது மட்டுமல்ல ஆராய்ச்சியிலும் கனமில்லை. எதைப் பற்றியும் முடிவாகச் சொல்லும் திண்மையும் இல்லை.

வெறும் படிப்பு மட்டும் எதையும் உருவாக்கிவிட முடியாது. அதற்கு மேலே, வாழ்க்கையைக் காணவும்—கண்டதை, தனித் தன்மையோடு சொல்லவும் தெரிய வேண்டும். இப்படிச் சொன்னவர்கள்தான் நிலைத்து நிற்கிறார்கள். டால்ஸ்டாய் கண்டு சொன்ன உலகம் தனி. தாஸ்தாவெஸ்கி கண்டு சொன்ன உலகம் தனி. துர்க்கனேவ் கண்டு சொன்ன உலகம் தனி. செக்காவ் கண்டு சொன்ன உலகம் தனி. கார்க்கி கண்டு சொன்ன உலகம் தனி. பாஸ்டர்நாக் கண்டு சொன்ன உலகம் தனி. இன்றைக்கும் மைகாயீல் ஷெலாக்காவ் சொல்லும் உலகமும், அலக்சாண்டர் ஸால் ஜெனிட்ஸின் சொல்லும் உலகமும் தனித் தனியானவை. இவர்களைப் படிப்பதால் ஒருவன் மேதையாகிவிட முடியும் என்பது வெறும் கற்பனை. படிப்பு எழுத்தாளனுக்கு உதவலாம். ஆனால் படிப்பே எழுத்தாளனை உருவாக்கிவிட முடியாது. படிப்பு என்பது என்ன என்றும் — என்னென்ன படிக்க வேண்டுமென்றும் கேள்வி வரும். முன்பெல்லாம் படிப்பு என்பது அந்த மொழி படிப்பையும்—சமஸ்கிருதப் படிப்பையும் குறித்தது. இன்று அதன் எல்லை விரிவடைந்துவிட்டது. உலக மொழி அனைத்திற்கும் வாரிசு ஆகிவிடுகிறான்.

எல்லாவிதமான சித்தாந்தங்களும் — இலக்கியங்களும் தேவையாக இருக்கிறது. சங்க இலக்கியமென்று தொடங்கி, பாரதியில் முடிவது தமிழன் படிப்பல்ல என்பது தெரிகிறது. இவைகளோடுகூட, சமஸ்கிருத, பௌத்த, ஜைன, டாரோவசிய—கிறிஸ்துவ—இஸ்லாமிய—படிப்பும், மார்க்ஸ் படிப்பும்—பிராய்டு படிப்பும் தேவையாக இருக்கிறது. அதனை ஒரு அடிப்படையான கல்வி என்றால்—இலக்கியத்திற்கு என்று குறைந்தது இன்னும் பத்துப் பேரையாவது படித்துக் கொண்டு இருக்க வேண்டும். இந்தப் படிப்பு நல்லது தான். ஆனால், எழுத்தாளனுக்குத் தான் சொல்ல வந்தது அல்லவா முக்கியம்.

கார்க்கிக்குப் புரட்சியும் மனிதனும் முக்கியம். அலக்சாண்டர் ஸால் ஜெனிட்ஸினுக்கு ஸ்டாலின் காலத்துக் கொடுமைகள்தான் முக்கியம். ஆர்தர் கொய்ஸ்லருக்குப் பொதுவுடமையே தீமையானது என்பது முக்கியம். ஜார்ஜ் ஆர்வலுக்கு சோவியத் ரஷ்யா கொடுமையானது என்பது முக்கியம். இதனைத் தங்கள் நோக்கில் எழுதியவர்கள் இவர்கள். இவர்கள் சொல்வது குறைவு படுத்தப்பட்டதாகவும்—மிகைப் படுத்தப்பட்டதாகவும் இருக்கலாம். இவர்களின் பார்வைதான் முக்கியம். அந்தப் பார்வைக்கு இலக்கியத் தன்மை கொடுத்திருக்கிறார்கள் என்பதை விசேஷமாகச் சொல்லவேண்டும்.

கு. ப. ராவுக்கும், புதுமைப்பித்தனுக்கும் எத்தனை வித்தியாசம். தி. ஜானகிராமனுக்கும் கு. அழகிரிசாமிக்கும் எவ்வளவு வேறுபாடு. இந்த வேறுபாட்டின் அடிநாதத்தைப் புரிந்து கொள்ளவில்லை ஒலூலூ. பொதுவில் படிப்பு என்று தப்பித்துக் கொள்கிறார்.

1950-க்கு பிறகு என்று ஒரு கால கட்டத்தை எடுத்துக் கொள்கிறார் சரி. இந்தக் கால கட்டத்தின் முதல்தரப் படைப்பாளி யார்? மூன்றாந்தர படைப்பாளி யார்? ஏணி வைத்துத் தூக்கிவிட்டாலும் கடைசித் தரத்திலேயே இருக்கும் படைப்பாளியார்? ஒலூலூ பெயரில் மறைந்து கொள்வது மாதிரி இங்கேயும் மறைந்து கொள்கிறார். சங்கீதத்தில் பெயர் சொல்ல முடிகிறது; சினிமா இசை அமைப்பாளரின் பெயர் சொல்ல முடிகிறது. ஆனால் இலக்கியம் என்றதும் ஒலூலூ ஒதுங்கிக்கொண்டு விடுகிறார்.

1950-இல் எழுத ஆரம்பித்தவர்கள் கிருத்திகா, தி ஜானகிராமன், கு. அழகிரிசாமி, சுந்தர ராமசாமி, ஜெயகாந்தன், நகுலன், பின்னால் சார்வாகன், கிருஷ்ணன் நம்பி, சுஜாதா, இந்திரா பார்த்தசாரதி, அசோகமித்திரன், முத்துசாமி, கி. ராஜநாராயணன், ராமகிருஷ்ணன், கிருஷ்ணமூர்த்தி, ஞானக்கூத்தன்—என்று பல படைப்பாளிகளைச் சொல்லிக் கொண்டு போகலாம்.

இதற்கு முன்னால் மௌனி, லா. ச. ராமாமிருதம், ந. பிச்சமூர்த்தி, சங்கரராம், ஆர். சண்முகசுந்தரம், க. நா. சுப்ரமண்யம், சிதம்பர சுப்பிரமணியம் - என்று பலரும் எழுதி ஓர் அடிப்படை அமைத்துக் கொடுத்தார்கள். ஆனால் பின்னால்தான் பல்வேறு கிளைகளோடு இலக்கியம் ஒரு நவீனத் தன்மை பெற்று - வாழ்க்கைக்குப் பிரதிநிதித்துவம் தருவதாகியது. ஒலூலூவுக்கு இவையொன்றும் தெரியவில்லை.

தமிழில் தற்காலத்தில் நான்காந்தர, ஐந்தாந்தரமென்று போகக் கூடிய சராசரிக்குக் கீழே உள்ள படைப்புக்கள் மிகவும் அதிகமென்கிறார். ஐந்தாந்தரமென்றும் - சராசரிக்குக் கீழே என்றும் கிருத்திகாவின் பொன் கூண்டையும் - வாஸவேஸ்வரத்தையும் சொல்கிறாரா? கு. அழகிரிசாமியின் 'ராஜாவந்திருக்கிறார்' 'அன்பளிப்பு', 'இரண்டு பெண்கள்', 'திரிவேணி'-ஏணி வைத்துத் தூக்கிவிட்டாலும் கடைசி தரத்தைத்தான்

அடையுமா? சுந்தர ராமசாமியின் 'வாழ்வும், வசந்தமும்' 'உழவுமாடும் கோயில் காளை'யும் இலக்கியத்தில் பெறும் இடமென்ன? சுஜாதாவின் 'தனிமைகொண்டு' ஏழாந்தரப் படைப்பா? சாண்டில்யனின் 'யவனராணி', ராஜம் கிருஷ்ணனின் 'வளைக்கரம்', ஜெகசிற்பியனின் 'திருச்சிற்றம்பலம்', மு. வரதராசனின் 'பெற்ற மனம்' ரா.கி. ரங்கராசனின் 'சின்னக் 'கமலா' - ஆகியவைகள் தான் முதல்தரப் படைப்புகளா? சிறந்த படைப்பைத் தேடிக்கொண்டிருக்கும் ஓலூலூ கொஞ்சம் பதில் சொல்வார் என்று நினைக்கிறேன். விஸ்வநாதனுக்கும், வேதாவுக்கும் உள்ள வித்தியாசத்தைச் சொல்கிறவர்-எஸ். பாலச்சந்தருக்கும், ஏமனி சங்கர சாஸ்திரிக்கும் உள்ள வேறுபாட்டைச்சொல்லுகிறவர், சுஜாதாவுக்கும் —கிருத்திகாவுக்கும் உள்ள வேறுபாட்டைச் சொல்லாமல் போவது ஏன்?

• இலக்கியத்தில் திரும்பச் செய்வது என்பது என்ன? வாழ்க்கையே திரும்பச் செய்வதுதான். என் தந்தை கல்யாணம் செய்துகொண்டார். நானும் கல்யாணம் செய்து கொண்டேன். அவரும் குழந்தைகள் பெற்றார். நானுந்தான். அவரால் பணம் சம்பாதிக்க முடியவில்லை. என்னால்கூடத்தான். இவ்வளவு ஒற்றுமை இருந்தும் அவருக்கு ஒரு வாழ்க்கை; எனக்கொரு வாழ்க்கை. என் மகனுக்கு இன்னொரு வாழ்க்கை. இந்த வாழ்க்கையைத் தன் காலத்து சமூக - பொருளாதார - அரசியல் நோக்கத்தோடு தனித் தன்மை ஒளிரச் சொல்வதுதான் இலக்கியம். ஆர்தர்கொய்ஸ்லர் சொன்னதையே ஜார்ஜ் ஆர்வல் சொல்வதாகக் கூறுவது அசட்டுத்தனம். அப்படிப்பட்ட அசட்டுத்தனமே பாஸ்டர்நாக் சொன்னதையே அலக்சாண்டர் ஸால்ஜெனிட்ஸின் சொல்வதாக உரைப்பது. புதுமைப்பித்தன் செய்ததையே கி. ராஜநாராயணன் செய்வதாகச் சொல்வதும்—கு. ப. ரா. செய்ததை—கொஞ்சம் புத்திபூர்வமாக இந்திரா பார்த்தசாரதி செய்வதாகச் சொல்வதும் அசட்டுத்தனத்தின் எல்லைகள்.

ஜனரஞ்சகமான கருத்தை அடிப்படை ஏதுமின்றி எழுப்புவதால்ஓலூலூவுக்குதவறுக்குமேல்தவறாக அபிப்பிராயம் சொல்வது தவிர்க்க முடியாத தாகிவிடுகிறது. அனைத்துலக இலக்கிய அளவுகோலில் உள்ள சராசரி அளவு கோட்டை நமது இலக்கிய அளவு கோலில் சிறந்த அளவு கோலாக்கிவிட்டு, உண்மையிலேயே சராசரி படைப்பைச் சிறந்த படைப்பு என்று மயங்கித் திருப்திபட்டுக் கொள்கிறார்கள் என்கிறார் ஓலூலூ. இப்படி மயங்குகிறவர்கள் யார்? க. நா. சுப்ரமண்யமா, மௌனியா, சுந்தர ராமசாமியா, சாண்டில்யனா, பி. வி. ஆரா? ஓலூலூ ஒன்றும் சொல்லவில்லை. இலக்கியம் என்றும், மூன்றாந்தரமென்றும், முதல்தரமென்றும் பொதுவில் சொல்கிறார்.

காப்காவைப் பற்றிக் கேள்விப்பட்ட மறுகணமே 'காஸலை' மிஞ்சும் படைப்பாளி யார் என்பதைச் சொல்ல வேண்டும். குறைந்தபட்சம் இப்படி எழுதத் துணிந்தவரையாவது, தான் கண்ட அளவில் சொல்ல வேண்டும். ப்ராய்டின் பெயர் தெரிந்ததும் தனது படைப்பை உளவியல் சுத்தமாகத் தருபவர்கள், நனவோடை என்று படித்தவுடன் நனவோடை இலக்கியம் தீட்டுபவர்கள் யார் யார்? இலக்கிய விவாதத்திற்குத் துணிவும் நம்பிக்கையும் வேண்டும். பதுங்கிக்கொண்டு மேதை என்று கிண்டல் பண்ணுவது விமர்சனம் ஆகாது.

கடைசியாக ஒரு வார்த்தை.

'காலூலூ என்று நான் பெயர் போட்டுக் கொள்ளலாம். ஓலூலூவுக்குச் சரியாக இருக்கும். ஆனால் இலக்கிய விவாதத்திற்கு வந்த பிறகு ஒளிவு மறைவு ஏன்? ஆகையால் நான் நானாகவே—அதாவது சா. கந்தசாமியாகவே இருக்கிறேன்.

- சா. கந்தசாமி

## மௌனி கதைகள்

மௌனி

விலை ரூபாய் 4/-

தமிழ்ச் சிறுகதைகளுக்கு உலக அந்தஸ்து தரும் சிறுகதைத் தொகுப்பு. 'பெங்குவின்''—நிறுவனம் சர்வதேச இலக்கியத் தேர்வில் வெளியிடும் இந்திய இலக்கியப் பிரிவில் இடம் பெற இருக்கும் சிறுகதை இத்தொகுப்பில் உள்ளது.

## கோணல்கள்

தொகுப்பு: நா. கிருஷ்ணமூர்த்தி

விலை ரூபாய் 4/-

இந்தத் தலைமுறையின் இலட்சியங்கள், நம்பிக்கைகள், ஆசைகளைச் சொல்லும்

ம. இராஜாராம்

சா. கந்தசாமி

நா. கிருஷ்ணமூர்த்தி

ராமகிருஷ்ணன் - சிறுகதைகள்

பத்திரிகை எதிலும் வெளிவராத சிறுகதைகள் — கோணல்கள்

★ ஒவ்வொருவரும் அவசியம் படிக்க வேண்டிய புத்தகங்கள் இவை.

★ ஏற்கனவே படித்து விட்டீர்களா? நல்லது. கசடதபற அளிக்கும் விசேஷ சலுகையைப் பயன்படுத்திக் கொண்டு உங்கள் வீட்டில் இப்புத்தகங்களை வாங்கி வையுங்கள்.

**கசடதபற** ஆண்டுச் சந்தா ரூபாய் மூன்றோடு இரண்டு ரூபாய் சேர்த்து அனுப்பி, உங்களுக்குவிருப்பமான ஒரு புத்தகம் உடனே பெற்றுக் கொள்ளுங்கள். தபால் செலவு 35 காசு. ஜனவரி இறுதி வரையே இச்சலுகை.

பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

ஆசிரியர்
கசடதபற
1 தேவடி தெரு
சென்னை 4

பல சந்தாதாரர்கள் தரமான இருபுத்தகங்களுமே தங்களுக்கு வேண்டுமென்று கேட்கிறார்கள். இதுபோல் பலரும் விரும்பலாம். அவர்களுக்கு இச்சலுகையை அளிக்கிறோம். இரு புத்தகங்களும் வேண்டுவோர் ரூ. 4/-ம் தபால் செலவு 70 காசும் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

## வேரும் விழுதும்

(ஆசிரியர்: க. சுப்ரமணியம். பிரசுரம்: வாசகர் வட்டம், சென்னை-17. பக்கங்கள்: 232. விலை ரூ. 5·00)

ஓர் அணையின் எழுச்சியில் நூற்றியைம்பதுகிராமங்கள் அழிந்துபோக இருக்கின்றன. அவற்றில் ஒன்றான குழுமணியைப் பற்றியது இந்த நாவல். நாவலின் கட்டமைப்பில் ஒரு புதிய வடிவத்தைத் தோற்றுவிப்பதும், தமிழ் இலக்கியத்தில் ஒரு புதிய நடையை உருவாக்குவதும் ஆசிரியரின் குறிக்கோள் என்று புத்தகத்தின் ஓரத்தாள் சொல்கிறது. ஒருவேளை அவர் எழுதப்போகும் நாவல்களை மனதில் கொண்டு அவ்வாறு சொல்கிறார் போலும்.

எடுத்துக்கொண்ட விஷயமும், பத்திரிகை நாவல்களிலிருந்து வேறுபடும் இந்நாவலின் வடிவமும்தான் இப்புத்தகத்தை ஓரளவு உயர்த்துகின்றன. இது ஒரு நோக்கில். இன்னொரு நோக்கில் அவர் எடுத்துக்கொண்ட விஷயத்தின் பரப்பும் ஆழமுமே ஆசிரியரைக் கைவிட்டு விடுகின்றன என்று சொல்லலாம். பக்குவமடைந்த எழுத்தாளர்களே கவனமாக எழுத வேண்டிய ஒரு விஷயம், ஆசிரியர் கையில் மேலோட்டமான ஒருங்கிணைக்கப்படாத நாவலாக அவர் பிடியிலிருந்து விலகிக்கொண்டே போயிருப்பதை எளிதில் காண முடியும்

ஓர் அணை எழுகிறது: அங்கு தோன்றும் நீர்த்தேக்கம் பலகிராமங்களை இடம் பெயரச் செய்கிறது: இது ஒரு கருத்து என்ற அளவில் சிறப்பானதுதான். ஆனால் கிராமங்களின் பெயர்ச்சியில் விளையும் மாற்றங்கள், கிராமம் என்ற சிறிய சமூகத்தை, அதன் உள்ளடங்கியிருக்கும் சமூக உறவுகளை, மனிதனுக்கும் நிலத்திற்குமிடையே நிலவும் உறவில் விளையும் அதிர்ச்சியை, தனிமனிதனுக்கு ஏறபடும் அச்சத்தைச் (சரியாகச் சொன்னால் (insecurity ஐ) சொல்ல பரந்த சமூகவியல் அறிவும், சமூகவியலாளனின் உணர்வும், நோக்கும் தேவைப்படுகின்றன. இதில் சுப்பிரமணியம் தடுமாறுவது வியப்பாக இல்லை. இங்கே சுப்பிரமணியம் என்பவர், வளர்ந்துவரும் இளம் எழுத்தாளர்களின், அவர்கள் எழுத்துக்குத் தேவையான ஒன்றியைந்த பிறவியல் ஞானத்தேவைகளின் குறியீடாகச் சொல்வது பொருத்தம் என்று படுகிறது. இந்நாவலில், இவ்விஷயங்களைப் பற்றிய தீர்க்கமான பிடிப்பு, நிச்சயம் இல்லாததால் பல குழப்பங்களைக் காண முடிகிறது.

இதில் இன்னொரு அடிப்படைக் குழப்பம்; இதில் வரும் இஞ்சினியர் கதை சொல்பவன்மட்டுமா அல்லது கதையுடன் இணைந்த பாத்திரமா என்பது ஆசிரியருக்கே தெளிவாகவில்லை. இந்தச் சிக்கல் தீராததின் விளைவாக நாம் காண்பது கதை சொல்பவன் நிலையிலுமின்றி, கதாபாத்திரத்தின் நிலையிலுமின்றி இயங்கும் ஒரு அம்சம். இதனால் திரும்பத்திரும்ப, சுப்பிரமணியம் என்ற தனி மனிதரின் Quotable Quotes மாதிரியான 'கருத்து வாக்கியங்கள்' நம் கண்களில் குத்துகின்றன.

ஒரு சமூகம் நிலைபெயர்வது உணர்ச்சி செறிந்த அனுபவம். அது மனித உணர்வுகளை, மதிப்பீடுகளை சோதிப்பதொன்று. அதைப்பற்றி எழுதவரும்போது ஆசிரியர் எந்த நிலையை வேண்டுமானாலும் ஏற்றுக்கொள்ளலாம். அந்நிலை கலைபூர்வமாக வெளிவந்தால் அம்மாற்றத்தை எதிர்கால வளர்ச்சியின் அறிகுறியாகக் காணமுடியும்; அல்லது துன்பம் நிறைந்த மனிதாபிமானமற்ற கேடாகக் கொள்ள முடியும்; இரண்டிற்குமிடையில் தெளிவற்ற, குழம்பிய நிச்சயமின்மையும், தர்ம சங்கடமும் இருக்க முடியும். ஆசிரியர் இவற்றில் எதை ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்பது முக்யமில்லை. அவர் சொல்லவந்தது ஒருமித்து, நாவலை உருவாக்க உதவியிருக்கிறதா என்பதுதான்; இந்நாவலில் எந்த நிலையும் தெளிவாகவில்லை. கதை சொல்லும் இஞ்சினியர் ஏற்றுக்கொண்டிருக்கும் நிலை குழப்பம் நிறைந்த ஒன்று. சில கிராமங்கள் திட்டத்தில் அழிவது ஒரு நாட்டின் வரலாற்றில் வெறும் புள்ளி விபரம் அல்ல என்று சொல்ல முற்படுகிறாற்போல், விஞ்ஞான அறிவியல் வளர்ச்சிக்கு அப்பாற்பட்ட ஒரு மனிதாபிமானத்தை உடையவராக; அணையின் எழுச்சியினால்விளையும் சமூகமாறுதல்களைத் துன்பம்நிறைந்ததாகக் காண்பவரைப்போல்; அதே நேரத்தில் வளர்ச்சியை, வளர்ச்சியின் போக்கில் தோன்றும் சில தவிர்க்க முடியாத பிரச்சினைகளைப் பற்றிய நம்பிக்கை நிறைந்தவராக; அதே நேரத்தில் அணையை எழுப்புவதில் கடமையுடன் அனைத்தையும் முடிக்கும் திறமை பெற்றவராக; ஆக, முகமூடிகள் பலவற்றை அணிகிறார். நமக்கு அவர் யார் என்பது தெரியவில்லை.

நாவலில் வரும் மற்றவர்களும் நமக்குப் பரிச்சயமானவர்கள். குறிப்பாக டாக்டர் சோமசுந்தரம். ஓரளவுக்கு idealistic character. இம் மாதிரியானவரைப் பல சாதாரண நாவல்களில் நாம் பார்த்திருக்கிறோம். அறம்வளர்த்தான் தமிழ்ப் பண்டிதர்களின் நாவல்களிலிருந்து வெட்டியெடுத்தாற்போன்று இருக்கிறார். ஸ்டேஷன் மாஸ்டர் ராயர், சாஸ்திரிகள் நாவலுக்கு உபயோகப் படாதவாறு ஆசிரியர் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

இன்னொரு அடிப்படை விஷயத்தைப்பற்றிய சந்தேகம். 150சதுரமைல் பரப்புடைய நீர்த்தேக்கம் என்பது, அதை முப்பதுமாத காலத்தில் முடிப்பதென்பது, ஒரு வாய்க்கால் வெட்டுவதற்கு ஒரு சில மணி நேரங்களில் சாங்ஷன் ஆவது என்பதெல்லாம் ஆசிரியருக்கு இவற்றைப்பற்றி நிச்சயமான ஞானம் இருக்கிறதா என்று கேட்கத் தோன்றுகிறது.

சுப்பிரமணியத்தின் நடையைப்பற்றி: அவருக்குக் கேள்விக்குறிஇல்லாமல் எழுதவராது போலிருக்கிறது. ஒரே நேரத்தில் தன் எண்ணங்களையும், புத்திசாலித்தனமாக 'கருத்து' சொல்லவேண்டும் என்ற வேகத்தையும், பாத்திரங்களைப்பற்றிய நோக்குடன்சேர்த்துக் கொண்டு விட்டதால் விளைந்தது. இதனாலேயே பல நல்ல கட்டங்கள் (உதாரணமாக அணை எழும் இடத்தில் தோன்றும் மாற்றங்கள்) வீணாகிவிட்டன.

—ராமகிருஷ்ணன்.

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.